உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 17 | பிரஜோற்பத்தி௵ மாசி௴ ௧உ | 1932௵ பிப்ரவரி௴ 13௨ | பகுதி 8

## கடவுள் வணக்கம்.

வட்ட மிட்டொளிர்பி ராணவாயுவெனு
நிகளமோ டுகம னஞ்செயு
மனமெ னும்பெரிய மத்த யானையையென்
வசமடக் கின்மு மண்டலத்
திட்ட முற்றவள ராஜ யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
ஏழை யேனுலகி னீடு வாழ்வனினி
யிங்கி தற்குமனு மானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்ரதா
பாக்ய மானசுக யோகமும்
பார காவிய கவித்வ நான்மறை
பாராய ணஞ்செய்மதி யூகமு
மட்ட சித்தியுந லன்பருக்கருள
விருது கட்டியபொ னன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
லாண்ட நாயகியெ னம்மையே. (1)

---

வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
வசமெனவே யான்கொடுக்க வாங்கிக்கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
சிறியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம். (2)

---

கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் மனத்தை அடக்கி யருளவேண்டும் என்று அகிலாண்ட நாயகியை வேண்டுகின்றார்.

(இ—ள்.) மன்னர்கள் துதிக்கத்தக்க—சக்கரவர்த்தித்துவம் என்கிற—பாக்கியமான சுகயோகத்தையும், பெருங் காவிய கவித்துவத்தையும், நான்கு வேதங்களையும் பாராயணம் செய்யும்படியான மதி நுட்பத்தையும், அட்டமா சித்திகளையும் நல்ல அடியார்களுக்கு அருள்செய்ய விருது கட்டிக்கொண் டிருக்கும் பொன் அன்னம் ஒப்பவளே! உலகனைத்தும் புகழ்கின்ற திருவானைக்காவில் வாழும் அகிலாண்ட நாயகி என்னும் என் தாயே! (ஒரு விண்ணப்பம் கேட்பாயாக,) சுழன்று ஒளிரும் பிராணவாயு வென்கிற விலங்குடன் நடக்கின்ற மனமாகிய பெரிய மதயானையை அடியேன் வசம் அடங்கச் செய்யின், மூன்று உலகங்களிலும் விரும்புதற்குரிய வளமான ராஜ யோகமே இவனது யோகமென்று அறிஞர் புகழுமாறு எளியேன் உலகில் நெடுங்காலம் வாழ்வேன். இனி, இதற்கும் இவ்விடத்தில் அநுமான மாகுமா? என்பதாம்.

சிவராஜ யோகத்தினுக்கு முக்கிய சாதனம் மனவொடுக்க மாதலினாலும், மனவொடுக்கம் பிராண வாயுவினை அடக்குதலினால் உண்டாகு மாதலாலும் மனமென்னும் யானைக்கு நிகளமா யிருப்பது பிராணவாயு என்றனர். இச்சாதனத்தினையே பிராணாயாமம் என்பர். ஜீவான்மாவின்கண்ணுள்ள அறியாமையினைச் சிறிது சிறிதாக அகற்றி, அதனறிவை விளக்கி, இறைவனுடைய ஞான சக்தியில் தோய்விக்கு முயற்சியே ராஜயோகம் எனப்படும். கோடீச்சுரத் தன்மையும், கவீச்சுரத் தன்மையும், யோகீச்சுரத் தன்மையும் தன்னுடைய அன்பருக்கு முதல்வி உபகரித்து வருதல் திண்ணமாகலின் "அன்பருக்கருள விருது கட்டிய பொன்னன்னமே" என்றனர்.

2. இதனால் "உடல் பொருள் ஆவி மூன்றையும் உனக்கே உரிமை யாக்கி யிருந்தும் அடியேனைத் துன்பம் தொடர்வது ஏன்?" என்று வினவுகின்றார்.

(இ-ள்.) தேடிவைத்த பொருளும், உடலும், ஆவியும் ஆகிய மூன்றையும் அடியேன் தேவரீர்வசம் தத்தம் செய்து ஒப்படைத்து விட்டேன். தேவரீரும் அடியேனது சித்தமிசை புகுந்து குடிகொண் டிருக்கிறீர்கள். இது மெய்யோ பொய்யோ என்பதை இங்குச் சிறியேன் மயங்காவண்ணம் உண்மையை உரைத் தருள்வீராக என்பதாம்.

3. இதனால் திருவருளன்றி உறவினரின் கூட்டுறவும் செல்வமும் எமபடரைத் தடைசெய்வன அல்ல என்பதை விளக்குகின்றார்.

(இ-ள்.) ஜனக்கட்டும் ஏனைய உலகியற் பெருமைகளும் அந்த எமபடர்கள் வருங்காலத்தில் அவர்களை (உனது திருவருளல்லது) எதிர்த்து வெட்டுகின்ற படைகளாமோ? ஆகா என்பதாம்,

---

தலைசுழல்பவன் தரணியும் சுழல்வதாய் எண்ணுகிறான். ஷேக்ஸ்பியர்.




## ஆடம்பர வாழ்க்கை



மக்கள் வாழ்க்கையின் நோக்கம் வாளா உண்டு, உடுத்து, உறங்கிக் கழிதல் அன்று என்பது சர்வ சமய சம்மதமான முடிவு. மக்கள் ஆறாவதறிவாகிய பகுத்தறிவு—காரண காரிய உணர்ச்சி விளங்கப் பெற்றவர். இதனால் இம்மை இன்பத்துடன் மட்டும் நில்லாது, மறுமை இன்பத்தையும் நாடி அடையும் தகுதி வாய்ந்தவராவர். உலகத்திலுள்ள எல்லா உயிரினும் உயரிய நிலையில் உள்ளவர் மக்கள் என்பதைக் கூறவேண்டுவதில்லை. இத்தகைய மக்கள் இப்பொழுது எத்தகைய வாழ்க்கையை மேற்கொண்டிருக்கின்றனர் என்பதையும் மக்கட்குரிய நல்வாழ்க்கைமுறை எது என்பதையும் ஒருவாறு ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

உலகில் எந்நாட்டை நோக்கினும் அந்நாட்டில் மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவுவதாகத் தோன்றவில்லை. உலகமே இப்பொழுது வறுமையில்—பொருண்முட்டில் தத்தளித்துக்கொண்டிருக்கிறது என்று சுருங்கக்கூறலாம். இவ்வறுமைக்கு—பொருண்முட்டுக்குரிய மூலகாரணம் என்ன என்பதை நேயர்கள் கூர்ந்து சிந்தித்தல் வேண்டும். சூரியன் உதிக்கவில்லையா? மழை பொழியவில்லையா? காற்றடிக்கவில்லையா? நிலம் விளையவில்லையா? மக்கள் உழைக்கவில்லையா? எல்லாம் நிகழ்ந்தவண்ணமாகவே இருக்கின்றன. ஐம்பெரும் பூதங்களும் தத்தம் கடமைகளினின்றும் ஒரு சிறிதும் தவறுவதில்லை. விதிப்படி அவை நடைபெற்றே வருகின்றன. எனினும் மக்கள் வாழ்க்கை அமைதிக்குறைவு—இன்ப வறுமையில் ஆழ்ந்து கிடக்கின்றது. மாக்கள் வாழ்வைக்காட்டினும் மக்கள் வாழ்வு பன்மடங்கு இழிந்துவிட்டது என்று கூறுவது மிகையாகாது. பகுத்தறிவுள்ள மக்கள் வாழ்க்கை இவ்வாறு இழிநிலை எய்தக் காரணம் என்ன? மக்களின் ஆடம்பரம்—"நாகரிகம்" என்பதே எமது கருத்து.

இக்காலத்தில் "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" என்ற அவ்வையின் அமுத வாக்கு ஆகாயத்தில் பறந்துவிட்டது. உண்பதில் ஆடம்பரம்! உடுப்பதில் ஆடம்பரம்! உறங்குவதில் ஆடம்பரம்! நடையில் ஆடம்பரம்! "சர்வம் ஆடம்பர மயம் ஜகத்" என்ற நிலைக்கு மக்கள் வாழ்க்கை உயர்ந்துவிட்டது. இந்த ஆடம்பரந்தான் நாகரிகம் என்ற நன்மொழியால் இப்பொழுது வழங்கப்படுகிறது. ஆனால் நாகரிகம் என்பதின் உண்மைப்பொருள் வேறு. நாகரிகம் என்பது கண்ணோட்டம். தாக்ஷண்யம். அதாவது அன்பும் அருளும் உடையாயிருத்தல் என்று பொருள்கொள்ளலாம். ஆனால் இப்பொழுதைய ஆடம்பர நாகரிகம் மக்களிடையே கண்ணோட்டத்தை—தாக்ஷண்யத்தை வளர்க்கின்றதா என்று கேட்கின்றோம். ஆடம்பரமோகம் மக்களிடையே பேராசை பொறாமை முதலிய இழிந்த தீக்குணங்களையே மேன்மேலும் வளர்த்து வருகின்றது. ஐம்பொறி வேட்கையை அளவுக்குமீறி உண்டாக்கி வருகின்றது. இன்று மக்கள் வாழ்க்கையை அல்லலுக்குட்படுத்தியிருப்பது ஆடம்பரம் ஆடம்பரம் என்று அஞ்சாது கூறிவிடலாம். மன்பதைக்கு ஆடம்பரத்தில் மோகம் குறையும் நாள் எந்நாளோ-அந்நாளே உலக அமைதிக்கான ஆரம்ப நன்னாளாகும்.

மேனாட்டு ஆடம்பர நாகரிக வெள்ளம் நமதுநாட்டில் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. மேனாட்டாரிடமிருந்து நாம் தெரிந்துகொள்ளவேண்டிய அரிய குணங்கள் பலவுண்டு. ஆனால் நம் நாட்டு மக்கள் அவற்றில் கருத்தைச் செலுத்தாது அவர்களிடம் காணும் வெறும் வெளிவேடங்களிலும் ஆடம்பரங்களிலுமே கருத்தைச் செலுத்திக் கண்ணழிந்து தவிக்கின்றனர். இப்பொழுது மேனாட்டாருக்கே தங்கள் ஆடம்பரவாழ்வில் அருவருப்புத் தோன்றி வருகிறது என்னும் உண்மையைப் பத்திரிகைகளின் வாயிலாகப் படித்து வருகின்றோம். ஆடம்பர நாகரிக உச்சியில் தாண்டவமாடிக் கொண்டிருந்த மேனாடுகளில் இப்பொழுது நிருவாண சங்கங்கள் தோன்றத் தொடங்கியிருக்கின்றன. செயற்கை வாழ்வை வெறுத்து இயற்கை வாழ்வுக்குத் திரும்பவேண்டும் என்று பல அறிஞர்கள் சங்கவாயிலாகவும், பத்திரிகைவாயிலாகவும், புத்தகவாயிலாகவும் பிரசாரம் செய்துவருகின்றனர். ஆங்காங்கு பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆடம்பரச் செயற்கை வாழ்வை நீத்து எளிய இயற்கைவாழ்வை மேற்கொள்ளத் துணிந்துவிட்டனர் என்றும் அறிகின்றோம். இவையெல்லாம் எதை விளக்குகின்றன? மேனாட்டாரிடையே ஆடம்பர வாழ்வின் மோகம் புளித்துக்கொண்டு வருகிறது என்பதை விளக்கவில்லையா?

இத்தாலிய சர்வாதிகாரியான முஸோலினி அவர்கள் தமது நாட்டு மக்கட்கு இயற்கையோடியைந்த வாழ்க்கையை மேற்கொள்ளு

மாறு உபதேசம் செய்து வருகிறார். சமீபத்தில் ஒரு வைத்திய சபையில் பேசியபோது வெளிச்சம், காற்று முதலியன இன்பவாழ்க்கைக்கு இன்றியமையாதன என்றும், உண்டி, உடை, உழைப்பு, உறக்கங்களெல்லாம் இப்பொழுது இயற்கை நெறியினின்றும் பிறழ்ந்து செயற்கை வழியிற் சென்றுகொண்டிருக்கின்றன என்றும், இவற்றை மீண்டும் இயற்கை நெறிக்கே திருப்பவேண்டும் என்றும் எடுத்துக்காட்டி யிருக்கிறார். தமது நாட்டு மக்கட்குப் பழ உணவு நற்பலன் அளித்துவருதல் அநுபவத்தில் விளங்கி வருகிறது என்றும் தெரிவித்தார். பெரும்பான்மையான மக்கள் வறுமையால் வாடுதற்கும், பிணிக் கூட்டங்களின் தோற்றத்திற்கும் மூலகாரணமாய் விளங்கும் ஆடம்பரச் செயற்கை உணவுகளைக் கைவிட்டு, சுவையும் நலமும் கலந்த இயற்கையுணவாகிய பழமுதலியவைகளையே மேற்கொண்டு, காற்றுக்கும், வெளிச்சத்திற்கும் தாராளமாக இடந்தந்து, மக்கள் இயற்கை நெறியில் ஈடுபட்டால் உலகவாழ்வில் இன்பமும் ஆரோக்கியமும் குதிகொண்டாடும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. செயற்கையுணவும் வாழ்வுமே மக்களை மருத்துவர் இல்லங்களை நாடச்செய்கின்றன. மருந்துகளாலும், சத்திர சிகிச்சைகளாலும் மக்கள் சுகவாழ்வடைதல் அரிது என்னும் உண்மை நாளுக்குநாள் தெளிவாகி வருகிறது. நமது நாட்டுமக்கள் பண்டைக்காலத்தில் இயற்கையோடியைந்த வாழ்வை மேற்கொண்டிருந்தமையால் நூறாண்டளவும் சுகமாக வாழ்ந்திருந்தனர். அத்தகைய பெருமை வாய்ந்திருந்த நமது நாட்டில் தற்கால சராசரி மரணவிகிதமும், ஆயுளளவு விகிதமும் மிகவும் அஞ்சத்தக்க முறையில் இழிவடைந்து நிற்கின்றன. இதற்கென்ன காரணம்? மேனாட்டு ஆடம்பர நாகரிகமோகம் என்பதில் எள்ளளவேனும் ஐயம் உண்டோ.

மக்களின் உடலை அரிக்கும் பிணிக்கூட்டத்திற்கும், துன்பப் பெருக்கத்திற்கும், உலக வாழ்வின் அமைதியைக் கெடுக்கும் பேராசை பொறாமைமுதலிய தீக்குணங்கட்கும் அடிப்படையாய்—முதற்காரணமாய் விளங்கும் ஆடம்பர நாகரிகமோகத்தை மக்கள் அறவே வெறுத்து நீத்தல்வேண்டும். மனிதனுக்கு மனிதன், சமூகத்திற்குச் சமூகம், நாட்டுக்குநாடு பகைமை பாராட்டச் சுயநலப்போர் தொடுக்கத் தூண்டும்பேய் இவ்வாடம்பர நாகரிகம் என்னும் உண்மையை ஒவ்வொருவரும் சிந்தித்து உணர்தல்வேண்டும். ஆடம்பர நாகரிகம் பிறர்நலம் பேண விடுவதில்லை. நமது நாட்டுச் சமயசாஸ்திரங்களெல்லாம் அவாவறுத்தலை—புலனடக்கத்தைப் பெரிதும் வற்புறுத்தி நிற்கின்றன. பற்றறுத்தலே வீடுபேறு என்று பாரித்து விளம்புகின்றன. துறவுநிலையைத் தூய அறமாகத் துதிக்கின்றன. இவ்வாறு கூறும் சாஸ்திரங்களின் உண்மைக்கருத்து என்னை? மக்கள் சுயநலத்தில், ஆடம்பரத்தில், பேராசையில், பொறாமையில், போராட்டத்தில் இறங்கி வாழ்க்கையைத் துன்ப மயமாகச் செய்து கொள்

ளக்கூடாது என்பதேயன்றோ? மக்களை விலங்குத்தன்மையினின்றும் நீக்கித் தெய்வத்தன்மையை—துன்பமற்ற இன்பவாழ்க்கையை மேற்கொள்ளுமாறு செய்யவே நம் நாட்டுச் சான்றோர் அவாவறுத்தலை—துறவறத்தை அளவுகடந்து வற்புறுத்திப் போற்றி விதித்தனர். இவ்வுண்மை உணராமல் "நமது சமய சாஸ்திரங்கள் எல்லாமக்களும் சந்நியாசிகளாகுமாறு உபதேசிக்கின்றன, மண் பெண், பொன்களை வேண்டாம் என்கின்றன—ஆதலால் உலகத்தில் மக்கள் வாழ்க்கைக்கு அவை பயன்படா" என்று சாஸ்திரங்களைப் புறக்கணிப்போர் அறியாதவரே என்பது எமது துணிவு. சமய சாஸ்திரங்கள் ஆடம்பர—அநாகரிக—அநியாயங்களை அழிக்க எழுந்த அற்புத வாளாயுதங்கள் என்றே நாம் போற்றுகின்றோம்.

தற்கால மக்கள் வாழ்க்கையில் தேவையல்லாத தேவைகள் மலிந்து பெருகிவிட்டன. இத்தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளச் செய்யும் முயற்சிகளிலேயே எல்லாச் சங்கடங்களும் தலையெடுக்கின்றன. இக்காலத்தில் மனிதன் தன் வாழ்வுக்காக ஆகாயத்தில் பறக்க வேண்டி யிருக்கிறது. கடலைக் கடக்கவேண்டி யிருக்கிறது. நாட்கணக்காக, வாரக்கணக்காக, மாதக்கணக்காக, ஆண்டுக்கணக்காக மனைவி, மக்கள், வீடு, வாசல்களைத் துறந்து வருந்தவேண்டி யிருக்கிறது. சுருங்கக்கூறின் மனிதன் ஒருசாண் வயிறு வளர்க்க—மானங் காக்க உலகத்திலுள்ள பலவேறுநாடுகளையும் எதிர்நோக்கி ஏங்கவேண்டியவனாகிவிட்டான். பண்டைக் காலத்தைப்போல தன்னூரை—தன்னாட்டைமட்டும் நம்பி ஒருவன் இக்காலத்தில் தனது வாழ்க்கையைப் பூர்த்தி செய்துகொள்ளும் நிலையில் இலலை. இவ்வளவுக்கும் மனிதன் தற்கால விஞ்ஞானசாஸ்திர உதவியை எதிர்பார்த்து தன் துன்பப் பெருக்கையெல்லாம் பொறுத்துக்கொண்டு வாழ்கின்றான். இதன் முடிவு என்னும் என்பதை ஆண்டவனே அறிவான்.

உலகம் எல்லாவளங்களும் நிறைந்தது. தன்னிடம் தோன்றும் உயிர்களை உலகம் தாங்கத் தயாராயிருக்கிறது. தன்னால் தாங்கமுடியாத உயிர்களை அது உற்பத்திசெய்வதில்லை. மனிதனது கண்ணுக்கே உலகம் துன்பமயமாகத் தோன்றுகிறது. "நான் ஏன் பிறந்தேன்?" என்று மனிதன் ஏங்கித் தவிக்கின்றான். மற்ற உயிர்கட்கு உலகம் துன்பமயமாகத் தோன்றுவதில்லை என்று எளிதில் ஊகிக்கப் பலகாரணங்கள் உண்டு. விலங்கு பறவைமுதலிய உயிர்களெல்லாம் மனிதனை விட உற்சாகமாய் உண்டு களித்து இன்பவாழ்வு நடத்துகின்றன என்று தெரிகிறது. இன்றைக்கு வேண்டும் நாளைக்குவேண்டும் என்ற பேராசைக் கவலை அவைகட்கில்லை. ஆனால் இவ்வுயிர்களின் வாழ்வை மனிதன் மதிப்பதில்லை. தன் வாழ்வே பெரிதென்று மனிதன் இறுமாந்து பெருமை பேசுகின்றான். "விலங்கு வாழ்க்கை" என்று அவைகளின் செயல்களை இழித்துரைக்கின்றான். அவைகட்குப் பகுத்தறிவு

இல்லை என்று ஏளனம்செய்கின்றான். உண்மையில் இக்காலத்தில் விலங்கினவாழ்வு சிறந்ததா மனிதவாழ்வு சிறந்ததா என்று சற்றே சிந்தித்துப் பார்க்குமாறு நேயர்களை வேண்டுகின்றோம். பகுத்தறிவுள்ள மனிதவாழ்க்கை பகுத்தறிவற்ற விலங்கின வாழ்வினும் பன்மடங்கு துன்பம் நிறைந்தது என்னும் உண்மை சிறிது சிந்திப்பார்க்கும் நன்கு விளங்கும்.

ஆடம்பரத்தைக் கண்டிக்கும் முகத்தான் மேனாடுகளில் தோன்றிக்கொண்டிருக்கும் நிருவாணவாழ்வை நமது நாட்டுமக்கள் மேற்கொள்ள வேண்டுமென்றோ, பகுத்தறிவற்ற விலங்கு வாழ்வில் ஈடுபடவேண்டும் என்றோ நாம் கூறுவதாக நேயர்கள் பொருள் கொள்ளக்கூடாது. ஆடம்பரத்தின் அநாகரிகத்தை விளக்கவே அவைகளை உதாரணமாக எடுத்துக்காட்டினோம். பகுத்தறிவு படைத்த மக்களிடையே இன்பவாழ்வு மறைந்துவிட்டது என்று ஏங்கியே அவைகளைக் குறிப்பிட்டோம். உலகில் எங்கு நோக்கினும் வேலையில்லாத் திண்டாட்டங்கள்—கிளர்ச்சிகள்—போர்கள் செறிந்துகிடக்கின்றன. ஒரு சிலர் இந்திரபோகம் நுகரப் பெரும்பான்மையோர் உண்டிக்கும் உடைக்கும் ஏங்கித்திரியும் நிலைமை நீடித்திருக்கும் வரை உலகில் அமைதி நிலவல் அரிதினும் அரிதாகும். பொருள் படைத்தவர்கள் எல்லோரும் பொதுநலத்தைப் பேணல்வேண்டும். அவர்கள் ஆடம்பரமற்ற எளிய வாழ்வை வலிந்து மேற்கொள்ளவேண்டும். ஆடம்பரம் நீங்கினால் உலக வறுமையும்—இதுகாரணமாகத் தோன்றும் தொல்லைகளும் நீங்கும். பாரதத்தாயின் உத்தம புதல்வராகிய மகாத்மா காந்தியடிகள் அரைத்துணியுடன் வாழும் உண்மையை ஒவ்வொருவரும் கூர்ந்து சிந்திக்கவேண்டும். காந்தியடிகள் ஆடம்பரத்தை அறவே வெறுக்கின்றார். எளியவாழ்வே இனியவாழ்வு என்று மனமொழி மெய்களால் உலகமக்கட்கு உபதேசித்து வருகிறார். "நாகரிக" நாடுகளெல்லாம் காந்தியடிகளின் பொன்மொழிகளை எதிர்நோக்கி நிற்கின்றன. நம் நாட்டுச் சமய அறிஞர் எல்லாரும் மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்த முற்படவேண்டும். மடாதிபதிகள் இத்துறையில் தொண்டாற்றினால் பெரும்பயன் விளையும். ஆண்டவன் அருள்புரிவானாக. தெய்வத்தன்மையுள்ள எளிய இனிய வாழ்வு ஓங்குக.

ஓம் தத் ஸத்.



---

கருணையால் கண்ணீர் வடிக்கும் முகத்தினும் உண்மை வாய்ந்த முகம் கிடையாது. கண்ணீர் விடுதல்கண்டு ஆநந்திப்பதினும் கண்ணீர் விடுதல் எவ்வளவு நலம்.

# பறவையின் நினைவுகள்



(சத்தியமங்கலம்—க-சு. கோபாலகிருஷ்ணன்.)

(இஃது 'Bird's Thoughts' என்ற ஆங்கிலப்பாவினை
ஒட்டி வரையப்பெற்றது)

உலகம் எல்லாம் உருண்டே சிறியதாய்
இலகிய தென்றே எண்ணியான் பலநாள்
என்றன் முட்டையுள் இருந்து வந்தே
நன்றே என்றன் நாட்களைக் கழித்தேன்.

பின்னர்,

புவனம் எல்லாம் புற்களின் சருகால்
கவனமோ டொன்றாய் கட்டிய தென்றே
நினைத்தேன் கூட்டினுள் நெடுநாள் வாழ்ந்தேன்
அனைத்து மின்னதென் றறியா திருந்தேன்.
கண்ணெலா மெனக்குத் திண்ணமாய்க் குருடென
எண்ணினேன் யான்! ஏனெனில் ஓர்நாள்,
வெளியே வந்தென் வேட்கை தீரக்
களியுட னிருந்து காற்றையுட் கொள்ளக்
கூட்டினை விட்டுக் குதித்தனன் மரத்திலென்
வீட்டினைச் சுற்றிலும் விந்தையாய்ப் பச்சை
இலைகள் பரவி யிருத்தலைக் கண்டுநீர்
அலைசூழ் புவியிது ஆகும் என்றுநான்
எண்ணிச் சிலநாள் இருந்து வந்தேன்.
நண்ணிய தென்வாழ் நாட்களின் முதிர்ச்சியும்
மற்றோர் நாள்யான் மரக்கிளை விட்டு
உற்றேன் இந்த உலகமாம் மண்ணிலே
உலகின் பரப்பினை உணர்ந்தனன் பின்னரே
பலகாற் பறந்தும் பரப்பதை அறிந்திலேன்

ஆதலின்,

உலகெலாம் உணர்ந்து ஓதுதல் அரிதாம்
பலகற் றோர்க்கும் பன்மடங் கீண்டு
அவர்பெறுக் கலையிவ் வவனியி லுளதால்
இவையெலாம் நாம்கொள எழுதுவோம் வாரீர்!




# ரொமானிய ஆட்சியில் பிரிட்டானியர் அடைந்த நன்மை தீமை.



(T. S. ராஜகோபாலன், B. A., L. T.,)

பொடீஷியா கலகத்தினால் விழிப்படைந்த ரொமானியர் சுமார் கி. பி. 150-450-வரையில் சமாதான முறையில் பிரிட்டானியரை ஆளத் தலைப்பட்டனர். ஜனங்கள் பெரும்பாலும் சமாதானத்தை யனுபவித்தனர். நாகரிகததில் தேர்ச்சிபெறறனர். நாட்டின் பொருளாதார நிலையிலும் விசேஷ அபிவிருத்தி யேற்பட்டது. அக்காலத்திய பிரிட்டனுக்கு நம் நாட்டில் தஞ்சாவூர் ஜில்லாவுக்குத் தென்னிந்தியாவின் சிங்காரத்தோட்டம் என்ற சிறப்புப்பெயர் ஏற்பட்டதே போன்று, "வடபாகத்தின் தானியக களஞ்சியம்" என்ற சிறப்பும் உண்டாயிற்று. முதலாவதாக ரொமானியர் தங்கள் ஆதிக்கத்தில் இருந்த நிலங்களைச் சார்ந்த காடுகளை யழிதது, சதுப்பு நிலங்களைப் பண்படுதது, விவசாய யோககியமுள்ள நிலங்களாகச செய்து கொண்டனர். அதே போன்று பிரிட்டனியத தலைவர்கள பலரும் தத்தம் நாடுகளில் செய்யத் தலைப்பட்டு விவசாய யோககியமான நிலங்களின் பரப்பளவு அதிகம் ஆக்கினர். அடுத்து ரொமானியரின் தேர்ந்த விவசாய முறைகள் பிரிட்டனில பிரிட்ட னியரால் அனுஷ்டானத்தில் கொண்டுவரப்பட்டு தானிய விளைவு அதிகமாக ஹேதுகரமாயிற்று.

மூன்றுவதாக ரொமானியர் வசிக்கும் பிரதேசங்களில் பட்டணங்கள் உண்டாகி, புதிய புதிய நாகரிக வீடுகள் கட்டப்பட்டதைப்போல் பிரிட்டானியத் தலைவர்களுடைய பிரதேசங்களிலும் பட்டணங்களும் நாகரிக வீடுகளும ஏற்பட்டன. அதற்கு மேலாக, ஒவ்வொரு பட்டினததிற்கும் போக்குவரவு சௌகரியமாக இருகக நல்லசாலைகள் போடப்பட்டன. நதிகளுக்குப் பாலங்கள் கட்டப்பட்டன, சாலைகளில் பிரயாணம் செய்வதற்கு பந்தோபஸ்துகளும் உண்டாயின. இவ்விதமாகப் போக்குவரவு சாதனங்கள் சரியாகவே வியாபாரம் அபிவிருத்தியாகிச் செல்வப் பெருககம் ஏற்பட்டது. இதில் பிரிட்டானியருக்கு உண்டான சந்தோஷம அளவில்லை.

ஆறுவதாக, செல்வப்பெருக்கம் உண்டாகவும் ஏற்பட்ட பணத்திற்குச் செலவு வகை உண்டாகுமாறு நாகரிகவாழ்வில் ஈடுபட விரும்பிய பிரிட்டானியர், ரொமானியரைப்போல உடுக்கவும், ஆபரணங்கள் செய்து கொள்ளவும், பொழுது போக்கவும், உண்ணல் ஆடல் பாடல்களில் ரொமானிரைக்

கைப்பற்றவும் தொடங்கி, அதிலும் தேர்ச்சி பெற்றனர். மேலும் தங்களை ஆளுபவருடைய மதமான கிறிஸ்தவ் மதத்தை யனுஷ்டிக்கத் தொடங்கி அவர்களைப்போல மாதா கோவில்களைக்கட்டி, பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்திக்கொண்டு அவர்களுடைய பாஷைகளையும் கலைகளையும் கற்றுத் தேர்ந்து வரலானார்கள்.

இவ்வாறு நாகரிகத்தில் தேர்ந்து சிறந்த பிரிட்டானியர்களிடம் மலைவாசிகளாகிய பிரிட்டானியரும், ஸ்காட்ஸ், பிக்ட்ஸ் என்ற ஆதிதாயாதிகளும் இந்தப் பளபளப்பு பிரிட்டானியரிடம் பொறாமை கொண்டு தங்கள் மலைவாசங்களிலிருந்து அடிக்கடி இவர்களுடைய பிரதேசங்களைத் தாக்கிக் கொள்ளை யடித்து வரலாயினர். அவ்விதம் அவர்கள் வாராதவாறு ஆளும் ரொமானியர் ஆங்காங்கு கோட்டைகளையும், அரண்களையும் மதில் சுவர்களையும் கட்டி ஆயுதபாணிகளான வீரர்களை வைத்துக் காவல் காத்து வந்தனர்.

தவிரவும் கடைசியாகப் படித்துத் தேர்ந்து, யுத்தப் பயிற்சியிலும் சிறந்த பிரிட்டானியர்கள் ரோம சாம்ராஜ்யத்தின் இதர பாகங்களைக் காக்க உத்தியோகங்களில் எடுக்கப்பட்டனர். பிரிட்டானிய வீரரடங்கிய சிறந்த சேனைகளும் அப்படியே அயல்நாடுகளில் சம்பளம் பெற்றுவந்தன. ஆனால் எவ்வித நன்மையும் உடன் பிறந்த தீமையின்றியிருப்பது கிடையாதென்பது வெளிப்படை. காடுகள் அழிக்கப்பட்டு நிலங்களைப் பண்படுத்தும் காரியங்களில் அநேக ரொமானிய புத்திசாலிகளுக்குப் பெரிய சம்பளங்கள் கிடைக்க ஏற்பாடாயிற்று. ஒரு உபத்திரவ காலத்தில் ஒளிந்துகொள்ளக்கூடிய இயற்கைப் பாதுகாப்புக்களைப் பிரிட்டானியர் இழந்தனர்.

விளைந்த தானியங்களை சௌகரியமான விலை கிடைக்கும் பிரதேசங்களில் விற்கச் சுதந்தரமின்றிப் பெரும்பாலும் ரோமுக்கே அனுப்பப்பட்டு வந்தனல் ரொமானியரால் கொடுக்கப்பட்டதே விலையாகும். ஆனல் பேர் மட்டும் "பெத்தபேர்" கிடைத்தது.

போக்குவரவு சாதனங்களினல் தானியம் சுலபமாக நாட்டைவிட்டு வெளியேறி உள்நாட்டு ஏழைக் குடிகளுக்குத் தானியப் பொருள் விலை கிராக்கி ஏற்பட்டது சகஜமும் பிரத்தியக்ஷ அனுபவமுமன்றோ? தவிரவும் போக்குவரவுக்குரிய சாதனங்கள் சேனைகள் நடத்துவதற்கும் சுலபமாக இருந்ததோடு அரைகுறையாகக் கிடந்த தேசாபிமானம் நசிக்கவும் ஹேதுவாயிற்று. பின்னென்ன தான் ஆகும்?

புதிய பட்டணங்கள், புதிய வீடுகள், புதிய உடைகள், புதிய ஆபரணங்களை யடைய, ரொமானிய கட்டட வேலைக்காரர்கள், ரொமானிய உடைதைப்போர், ரொமானிய தங்க வேலைக்காரர்கள், ரொமானிய கட்டட நிர்மாணஞ் செய்பவருக்கு வந்த கொஞ்ச லாபமும் பங்கிடப்பட்டது! நாகரிகத்தின் விலை கொஞ்சமாயிருக்குமா? ரொமானியப் பழக்க வழக்கங்கள் மலிந்து பிரிட்டானியர் பூராவும் உருமாறினர். அந்நிய நாகரிகப் பித்தம் தலைக்கேறிவிட்டது.

அன்னிய நாகரிகப் பித்தத்தினல், ஏற்படக்கூடிய திடபல நஷ்டம், சோம்பல் வாழ்வில் ஆசை, களியாட்டங்களில் பொழுது போக்க இச்சை முதலிய அண்ணன் தம்பிமார்களும் சேர்ந்தனர். ஏதேனும் கொஞ்சம் இருப்பி

னும் கல்வியபிவிருத்தியில் உண்டான உத்தியோகப் பைத்தியம், பிரதேசப் பிரயாண இச்சை, ஸ்வதேச வெறுப்புக்கள் பூர்த்தியாகக் காலியாக்கின.

இதைக் கண்டு புழுங்கும் சில தேசாபிமானிகளின் கொதிப்பைப் பய முறுத்தி யடக்க ஆங்காங்கு கட்டப்பட்ட அரண்களும் அவைகளிலுள்ள வீரர் களும் தயாராயிருந்தனர் என்பதைச் சொல்லாமலே வாசகர்கள் அறிவர்.

ஆகப்பலமிழந்த சோழையராகி, தாய்த் திருநாட்டுக்கு இன்னல் வந் துற்றபோது கையை விரிக்கவும், தற்காப்பு இன்றி அநாதைகளாய்ப் பரிதவிக் கவும் நேர்ந்த விபரம் அடுத்த கதையில் விளங்கும்.

(நன்மை தீமையொன்றும் ஆய்ந்துபாராது கேவலம் கண்மூடித்தனமாக நவ நாகரிகப் பித்தத்தில் மூழ்கிவரும் நம் ஆண் பெண் இளைஞர்கள் சரித்திர உண்மையை நன்குணர்வார்களாக! உள்ளதை உள்ளவாறு உரைத்து பாரத நாட்டின் சீரையும் சிறப்பையும் சிதையாது காக்கப் பாடுபட்டுவரும் ஆனந்த னும் அதன் அன்பர்களும் சிறந்துவாழ இறைவன் திருவருள் புரிக!)

# இந்தியாவில் பிறமதம் பரவியதேன்?



இந்தியாவில் பிறமதம் பரவியது ஏன்?—இப்படத்தின் மூலம் அதைக் கண்டுபிடிக்கும் சிரமத்தை நீங்களே மேற்கொள்ளுங்கள்.

---

துக்கத்தை அடக்காதே, மொழிந்துவிடு. இல்லை எனில் இருதயத்தை உடைந்து விடச் செய்யும்.

# ஈனேக் ஆர்டன்.

(T. ஸ்ரீநிவாஸ ராவ்., பி. ஏ.)

(436-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிலிப் அன்னியின் மனதை நன்கறிந்தாளில்லை. அன்னிக்கும் பிலிப்பின் எண்ணத்தை அறியக் கூடவில்லை. ஆனால் குழந்தைகளுக்கு மிகவும் வேண்டியவனாய் விட்டான். அவனது வீட்டிற்கும் ஆலைக்கும் அவர்களே எஜமானர்கள்போல் விளங்குகிறார்கள். அவனைக்கண்டால் போதும், அவர்கள்பாடு குஷிதான். 'அப்பா! அப்பா!' என்று இடைவிடாமல் பேச ஆரம்பித்து விடுவார்கள். ஆகவே அவர்களுக்கு ஈனேக்கைப் பற்றிய எண்ணமெல்லாம் மறைய ஆரம்பித்தன. பத்து வருடங்கள்—ஈனேக் தன் நாட்டை நீத்து, மக்களையு நல்லாளையும் பிரிந்து, வீடிழந்து வெளிநாட்டுக்குச் சென்று பத்து வருடங்கள்—பறந்து சென்றன. அவனைப்பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லை.

ஒருநாள் மாலை அன்னியின் அருங்குழந்தைகள் மற்றவருடன் காட்டையடைந்து பழங்கள் பொறுக்கச் செல்ல விரும்பி அன்னியையும் அழைத்தனர். 'அப்பா, நீரும் வாரும்' என பிலிப்பையும் சட்டையைப் பிடித்திழுத்தனர். சற்றுத் தயங்கினான். ஆயினும் அன்னி செல்கிறாளல்லவா! அதனால் "சரி வருகிறே"னென இசைந்தான். அனைவரும் காடடைந்தனர். உயர்ந்த பிரதேசத்தில் மேலே ஏறிச் சென்றனர். பாதிதூரம் சென்றதும் அன்னிக்கு அசதி ஏற்பட்டது. 'நான் சற்று இளைப்பாறவேண்டும்' என்று உட்கார்ந்து விட்டாள். பிலிப்பும் மனமகிழ்ச்சியுடன் அமர்ந்தான். குதூகலமாய்க் குழந்தைகள் பள்ளத்தாக்கில் ஓடிப் பிரிந்து சென்று விளையாட ஆரம்பித்தன.

பிலிப் தன் பக்கலில் அன்னி இருப்பதையே மறந்தான். முன்னொரு நாள் அதே இடத்தில்தான் படுகாயப்பட்ட மிருகமென வருத்தத்துடன் மறைந்ததை நினைத்தான். 'அன்னி! அதோ! அக்காட்டில் அவர்கள் எவ்வளவு களிப்புடன் இருக்கிறார்கள் பார்த்தனையா! என்ன ஒருமாதிரி இருக்கின்றாயே! களைப்பா?' என்றான். பதிலேயில்லை. 'களைப்பா?' என்றான் மறுபடியும். அன்னிதன் முகத்தைக் கையால் பொத்திக்கொண்டாள். சற்றுக் கோபமுற்றவன்போல் பிலிப் 'கப்பல் காணாது போய் விட்டது. அந்த எண்ணமேன் இன்னும்? வருந்தி உன் உயர்ந்த உயிரை மாய்த்துக்கொண்டு குழந்தைகளைத் திக்கற்றவர்களாக்கப் பார்க்கிறாயே?' என்றான். 'அந்த நினைவில்லை' என்றாள் அன்னி. சற்றுக்கிட்ட நெருங்கினான் பிலிப். 'அன்னி, என் மனதில் எப்பொழுது ஏற்பட்டதென்று எனக்குத் தெரியாமல் வெகு காலமாக

---

உயிர் போகுமுன் பலமுறை இறப்பர் கோழைகள். வீரர்கள் இறப்பது ஒரு முறையே.

ஒன்று இருந்து வருகிறது. அது கடைசியாக வெளிவந்து விடுமென எண்ணு கிறேன். அன்னி! பத்து வருடங்களுக்கு முன் உன்னைப் பிரிந்து சென்றவன் இன்னும் உயிருடன் இருப்பான் என்று எண்ணுவது பெரும் பேதைமை நீ ஏழைமைப்பட்டு உதவிபற்றிருப்பதைக்காண என் மனம் வருந்துகின்றது. நான் உனக்கு உதவி செய்ய வேண்டுமாயின்—பெண்கள் வெகு யூகசாலிக வென்பார்களே!—நான் நினைப்பது என்னவென்று உனக்குத் திண்ணமாய்த் தெரியுமடி—நீ என் மனைவியானல் இவ்வளவு நாள்பட்ட கஷ்டமிருக்கட்டும்—நாம் கடவுள் கிருபையால் சந்தோஷமாகக் காலங் கழிக்கலாமே—எனக்கோ உற்றாரில்லை. உறவினரில்லை. கவலையுமில்லை. ஒரு சுமையுமில்லை. உனக்காக வொரு கவலைதான். நாமிருவரும் ஒருவரை யொருவர் நன்றாய் அறியோமா? அன்னி! உனக்குத் தெரியு முன்னரே, வெகு காலமே நான் உன்னை மன மாரக் காதலித்து வருகிறேன்' என்றான் பிலிப்.

மெல்லென அன்னி 'பிலிப், தேவதூதன்போல் கருணை வள்ளலாய் என் வீட்டிற் கிருந்துவந்த சீமானே! உன்னைக் கடவுள் ஆசீர்வதிக்கட்டும். என்னை விட உயரிய பரிசை உனக்கவ ரளிக்கட்டும். ஒருத்தி இருமுறை காதலிக்க முடியுமா? நீ வேண்டுவ தென்ன?' என்றாள். 'அவனைவிடச் சற்றுக் குறை வாய் என்னைக் காதலித்தல் போதுமானது' என்றான் பிலிப். 'ஐயோ, அன்ப! சின்னாள் பொறு! ஈனேக் வந்தால்—அவன் வரமாட்டான்—ஆயினும் ஒரு வருடம் பொறு—அவ்வளவு நீண்டகால மல்லவே—சற்றுப் பொறுக்க மாட்டாயா? என்றாள். 'நான் கடமைப்பட்டவன்தான்' என்றான் பிலிப். 'சத்தியமாகக் கூறுகிறேன் ஒரு வருடத்தில்-நான் ஒரு வருடத்தைக் கழிப் பது போல நீயும் கழித்துவிடு' என்றாள் அன்னி. நான் அவ்வாறே செய் வேன்' என்றான் பிலிப்.

சற்றுநேரம் மௌனம். கதிரவனும் சிவந்த மேனியனாய் மேற்கடலில் மூழ்கும் நேரம் வந்தது. பிலிப் குழந்தைகளைக் கூவ அவர்களும் கை நிறை யக் கொட்டைகளை அள்ளிக்கொண்டு ஓடிவந்தனர். வீட்டை நோக்கி அனைவ ரும் புறப்பட்டனர். அன்னியின் வீட்டுவாயிலை அடைந்ததும், பிலிப் அன்னி யின் காத்தைப் பற்றிக்கொண்டு, "அன்னி நீ மனமிடிந்திருக்கையில் என் எண்ணத்தைத் தெரிவித்தேன். நான் செய்தது தப்பிதமே. நான் உண்மை யில் கடமைப்பட்டவனே. ஆனல் நீ சுயேச்சை பெற்றவள்தான்?" என்றான். 'இல்லவே இல்லை' என்று அழுதுகொண்டே கூறினாள் அன்னி.

நாள்கள் கழிந்தன. பிலிப்பின் வார்த்தைகள் அன்னியின் காதில் ஒலித் துக்கொண்டே யிருந்தன. மறுபடியும் அறுவடை காலம் நெருங்கிற்று. வெகு வேகமாய் ஒருவருடம் கழிந்துவிட்டது. பிலிப்பும் அன்னியின் முன் சென்று நின்றான். 'அதற்குள்ளாகவா ஒரு வருடம் கழிந்துவிட்டது' என்று திகைப்புடனவள் கூற, 'ஆம்' என்றானவன். 'பிலிப்! இன்னுமோர் மாதம்—நிச்சயமாகக் கூறுகிறேன். அதற்குமேலில்லை—நான் உண்மையில் உனக்குக் கடமைப்பட்டவள்தான்—ஒருமாதம் பொறுத்துக்கொள்' என்றாள். 'உன் னிஷ்டம் போல் எவ்வளவு நாளாயினும் சரி' என்று நாக்குளறக் கூறினான்

---

விரும்ப வேண்டியவற்றை விரும்பவும் வெறுக்கத் தகுந்தவற்றை வெறுக் கவும் செய்யுமாறு நன்னெறியில் செலுத்தப்படும் அன்பே அறமாகும்.

பிலிப். இவ்வாறு ஏதேதோ சாக்குப் போக்குகள் கூறி அன்னி ஆறுமாதங்களைக் கழித்துவிட்டாள்.

ஊர்வாயை மூட முடியுமா? தங்களுக்கே நேர்ந்த குற்றமென அனைவரும் அலட்ட ஆரம்பித்தனர். பிலிப் அன்னியைத் துச்சமாக எண்ணுகிறானென்றார் சிலர். அன்னிதான் பிலிப்பிற்கு இணங்கமாட்டேனென்கிறாள். அது அவள் தப்பிதம் என்றார் மற்றுஞ் சிலர். இருவரையும் கண்டு ஏளனம் செய்தார் பலர். ஆனால் அன்னியின் மகனோவெனில், பிலிப்பின் எண்ணத்திற்கிசைவதே அன்னிக்கு நன்மை என்று எண்ணினானாயினும் வெளியே கூறினானில்லை. தமக்கு ஆபத்துக் காலத்தில் ஆறுதலும் வேண்டிய உதவியும் அளித்த பிலிப்பை மணம் செய்து கொள்ளென அன்னையை வற்புறுத்தினாள் பெண். வசீகரத் தோற்றத்துடன் விளங்கிய பிலிப்பின் முகம் வருத்தத்தால் வாடி வதங்கிற்று. இவையனைத்தும் அன்னியின்மேல் அம்புபோல் தைத்தன.

ஒருநாளிரவு அன்னிக்குத் தூக்கம் வரவில்லை. 'கடவுளே, ஈனோக்கைப் பற்றி ஏதாவது ஓர் அறிகுறியேனும் கிடைக்குமா? அவன் இருக்கிறானோ இறந்துவிட்டானோ?' என்று நினைத்துப் பிரார்த்தித்தாள். படுக்கையை விட்டெழுந்தாள். விளக்கேற்றினாள். வேதப் புஸ்தகத்தை விரைவினிலெடுத்து, ஒரு பக்கத்தைத் திருப்பி அதிலோர்புறம் கையை வைத்தாள். 'பனையினடியில்' என்ற எழுத்துக்களின்மேல் கையை வைத்திருந்தாள். ஒன்றும் அவளுக்கு விளங்கவில்லை. புஸ்தகத்தை மூடிவிட்டுத் தூங்கினாள். கனவுகண்டாள். 'ஆ! அதுவென்ன! ஈனோக் அதோ ஒரு பனையின்கீழ் உட்கார்ந்திருக்கிறான். அவன் தலைக்கு மேலே சூரியன். சரி, அவனிறந்துவிட்டான். ஆனந்தமாய்ச் சுவர்க்கத்திலிருக்கிறான். அங்கு பிரகாசிப்பது ஞான சூரியன். சட்டென விழித்தாள். பிலிப்பை அழைத்துவரச் சொன்னாள். கடிதிற் கடிமணம் நடந்தேற வேண்டுமெனக் கூறிவிட்டாள்.

பிலிப்பிற்கு இரட்டைச் சந்தோஷம். மணிகள் ஒலிக்க மணம் நிறைவேறியது. ஆனால் அன்னியின் உள்ளத்தில் அந்தகாரமே அமைந்திருந்தது. அது முதல் யாரோ தன்னைத் தொடர்ந்து வருவதுபோல் அவள் மனதிற் பட்டது. தனியே இருக்கவே பயந்தாள். கதவைத் திறந்துகொண்டு வீட்டினுள் தனியே நுழையவே நடுங்குவாள். அவள் கருவுற்றிருக்கும் காரணத்தினால் அவ்வாறு நடுங்குகிறாளென நினைத்தான் பிலிப். பத்தாமாதத்தில் அதிசௌந்தர்யமானதும் அவளை எல்லாவிதத்திலும் ஒத்ததுமானதோர் குழந்தை அவளுக்குப் பிறந்தது. பழைய பயமெல்லாம் பறந்து சென்றன. புதுத்தாயெனும் எண்ணம் தோன்றவே பிலிப்பின்மீது காதல் வளர்ந்தது. பழைய உணர்ச்சி மறைந்தது.

* * *

ஆனால் ஈனோக் எங்கே? 'நற்பாக்யம்' எனும் கப்பல் வெகு சுகமாய்க் கடலைக் கிழித்துக்கொண்டு சென்றது. உஷ்ணப் பிரதேசத்தை அடைந்தது. வழியில் பல அல்லல்களேற்படினும் அவையனைத்தையும் பொருட்படுத்தாது 'நற்பாக்யம்' பொன் விளையும் புனிதமான கீழ்நாட்டை அடைந்தது.

---

செல்வத்திலோ களியாட்டிலோ புகழிலோ பற்றுடையவன் எவனும் ஜனங்களிடம் பற்றுடையவனாகான்.

அதில் பிரயாணம் செய்த ஈனேக் சொந்த வியாபாரம் செய்யத் தொடங்கினன். பல விசித்திரமான பண்டங்களை வாங்கிக் கொண்டான். அழகானதோர் பொம்மையைத் தன் பாலனுக்கு வாங்கிக் கொண்டான். பாவம் ! பின்னல் வரப்போகும் கூற்றை அவனல் எவ்வாறு அறியக்கூடும்! தன்னூர் நோக்கிப் புறப்பட்ட கப்பல் பன்னட்கள் கஷ்டமெதுவுமின்றிக் கம்பீரமாய்ச் சென்று கொண்டிருந்தது. ஒருநாள் திடீரென எங்கும் அமைதியேற்பட்டது. சட்டென அது மாறிற்று. வான மிருண்டது. வைய நடுங்கிற்று. காற்றடித்தது. கடல் குமுறிற்று. அலைகளின் வாய்ப்பட்ட மரக்கலம் கண்டவாறு சென்று கடைசியில் ஒரு பாறைமீது மோதிப் படாலென உடைந்தது. ஈனேக்கையும், மற்றிருவரையும் தவிர அனைவரும் அலையினுள் ஆழ்ந்து அழிந்தனர். ஒடிந்த கட்டை யொன்றைப் பிடித்துக்கொண்டு, தண்ணீரில் தத்தளித்துக் கொண்டு தனித்ததோர் தீவின்கரையில் ஏறினர் அம்மூவரும்.

அத்தீவில் எங்கு நோக்கினும் அபரிமிதமான உணவுப் பொருள்கள் காணப்பட்டன. பிராணிகளனைத்தும் மனிதரின் கொடுமையை அறியாதனவாதலின் அச்சமின்றி அலைந்து திரிந்தன. சமுத்திரக்கரையை நோக்கிநின்ற மலைப்பாங்கில் பனை இலையால் வேய்ந்த குடிலில் அம்மூவரும் மனதில் கவலை பாதித்து நிற்க சுவர்க்கபோகம் நிறைந்த அத்தீவில் வாழ்ந்து வந்தனர்.

அவர்கள் மூவரிலும் இளையவன் கப்பல் மோதுண்ட இரவு ஏற்பட்ட அதிர்ச்சியால் ஐந்து வருடம் படுத்த படுக்கையாயிருந்து முடிவில் மடிந்தான். அவனிறந்த சின்னட்களில் மற்றொருவன் ஒரு பெரிய மரத்தினடியைப் பொசுக்கி ஓர் படகுபோல் ஆக்க முயல்கையில் உஷ்ணத்தால் தாக்கப்பட்டு இறந்தான். எஞ்சியவன் ஈனேக்தான். 'சரி இன்னும் சற்றுப் பொறுக்க வேண்டுமென்பது ஈசன் திருவுளம் போலும்' என்று எண்ணினன்.

மலையின் உச்சிவரை அடர்ந்த மரங்களும், புல்வெளிகளும் வளைந்து வளைந்துள்ள பூங்காவனங்களும், விண்ணைத்தொடும் விருக்ஷ வகைகளும் செறிந்து விளங்கின. இயற்கை வனப்பு நிறைந்த அத்தீவு முழுவதையும் ஈனேக் சுற்றிப் பார்த்தான். ஆனல் அன்பு ததும்பும் மனிதன் முகத்தைக் காண முடியவில்லை. ஓர் இனிய குரலேனு முண்டா? ஏது! எண்ணற்ற கடற்பறவைகள் கத்தும் ஒலியும், பலகாததூரம் நீண்டு நிற்கும் அலைகள் பாறைமீது மோதும் சப்தமும், உயர்ந்து செறிந்த மரங்கள் காற்றிலசையும் ஓசையும், நீரோடையின் சலசலப்பும் தவிர வேறு குரலேயில்லை. ஏதேனுமோர் கப்பல் வருமாவென நாள் முழுவதும் நீலநிறக்கடலை இமை கொட்டாது பார்த்து நிற்பான் ஈனேக். அவ்வாறு நாட்கள் பல சென்றன. மரக்கலமும் வருவதாயில்லை. அனுதினமும் வழக்கமாகக் கதிரவன் குணதிசை தோன்றி வானவீதியில் ஏறிச்சென்று குடதிசை மலைமீது வீழ்வான். மறுபடியும் குணதிசையி லுதிப்பான் இதைத்தவிர வேறு மாறுதலேயின்றி காலச் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது.

ஒன்றுந் தோன்றமல் சில வேளைகளில் வெறும் வெளியை விரைக்கப் பார்த்து நிற்பான். அவ்வேளை, தோற்றத்தின்பின் தோற்றமாகப் பல அவன்

---

மனிதனல் இயல்வதெல்லாம் இயற்றத் துணிவேன். அதற்கு அதிகம் செய்யத்துணிபவன் மனிதன் அல்லன்.

மனக்கண்முன் தோன்றி மறையும். இல்லாவிடில் மானசீகமாகவே மனிதர்களிடை, கரைகாணாக் கடலுக்கப்பாலுள்ளதோர் தீவினிலே, தனக்கு அறிமுகமான பிரதேசங்களில் நடமாடுவது போலவும், தன் குழந்தைகளின் மழலைச் செற்களைக்கேட்டு மகிழ்வது போலவும் நினைப்பான். அன்னி, சிறுவீடு, உயர்ந்துமேலே செல்லும் வீதி, மாவாலை, மரமடர்ந்த சோலைகள், தேக்கு மரம், தான் விற்றபடகு, ஜில்லென்றிருக்கும் நவம்பர் மாதத்திய காடு, மிருதுவான தூறல், மக்கிக்கிடக்கும் இலைகளின் நாற்றம், மங்கிய கடலின் ஆழ்ந்த ஓசை—இவ்வாறு பல எண்ணங்கள் அவனுக்கு முன் துள்ளிக்குதித்து மறையும். ஒரு தடவை இவ்வாறிருக்கையில், மெல்லென வெகு தொலைக்கப்பால், கோலாகலமாய் கலகலக்கும் மணியின் ஓசை அவன் செவிகளில் விழவே அது எங்கிருந்து வருகின்றதென்று அவனுக்கு விளங்கவில்லை. அவனுடம்பு புல்லரித்தது. துள்ளி எழுந்தான். மண்டியிட்டு இறைவனை வணங்கினன்.

## பட்டதாரியின் பரிதவிப்பு!




“அடடா! நான் கரைத்துக் குடித்த புத்தகங்கட்குக் கணக்கு வழக்குண்டா? டிப்ளோமாக்கள், டிக்ரிகள், சர்டிபிகேட்டுகள், தனிப் பரிசுகள் எல்லாம் பெற்றேன். பெற்றும் பயன் என்? எங்போனலும் “காலி இல்லை” “காலி இல்லை” அந்தோ ஆங்கிலமே! இதுவா உன்மகிமை?”

# லைப் இன்ஷியூரென்ஸ் பகுதி

(இன்ஷியூரென்ஸ்.)

## நரன் பிரயாணம்

தரித்திரம் என்று ஒரு பட்டணமுண்டு. எல்லா விதத்திலும் அது தன் பெயருக்குத் தகுந்தாற்போலவே யிருந்தது. சதா அகால மழை அல்லது மழையின்மை, வீடுகளிலெல்லாம் ஒன்றிரண்டிற்குக் குறையாமல் நோயாளிகள், போதுமான வுணவின்மை—இவையே அதன் குணாதிசயங்கள். ஜனங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேர் பரம ஏழைகள். வீதிகளில் நடந்தால் வியாதி வருமபடி அவ்வளவு அசுத்த ஆபாசங்கள் கிடந்தன. சம்பாதிக்கும் சொற்ப சம்பளம வைத்தியர்களுக்கே சரியாக விருந்தது. ஜனங்களுக்கு நாளுக்கு நாள் கடன் ஏறிக்கொண்டு வெகுசிரமமாக விருந்தது.

இவ்வூரில் நரன் என்ற மனிதன் இருந்தான். அவனுக்கு மாதம் இருபத்தைந்து ரூபாய் சம்பளம். இச் சொற்ப சம்பளத்தில் அவன் தனது குடும்பத்தைக் காபபாற்றுவது வெகு கஷ்டமாக விருந்தது. மனைவியோ அடிக்கடி நோயுடன் அவஸ்தைப்பட்டு வந்தாள். குழந்தைகள் போஷிப்பில்லாமல் மெலிந்திருந்தன. கடன்காரர்கள் தொந்தரவு அதிகமாக விருந்தது. உத்தியோகம் காயமாயிற்றே யொழிய சம்பளம் உயரவில்லை. பணக்கஷ்டம், வியாபாரமின்மை ஆகையால் சம்பளம் அதிகமாக்க முடியவில்லை யென்று சொல்லிவிட்டார்கள். என்ன செய்வான் பாவம்! தன் மனைவியோடு அடிக்கடி தன்னுடைய கஷ்டங்களைக் குறித்துச் சொல்லி வருந்துவான். "பெண்ணே! இக் கஷ்டஙகளைப் பார்ப்பதற்கு வெகு சங்கடமாக விருக்கின்றது. நமது சிறிய குழந்தைக்கு வைத்தியர் கிச்சிலிப்பழங்களைப் பிழிந்து ரசம் கொடுக்கச் சொன்னாரே. அப்பழங்களை வாங்கவும் பணமில்லையே பட்டணத்தைவிட்டு வெளியூர் சென்று இரண்டுமாத மிருந்தால் தேகாரோக்கியமாயிருக்கு மென்கிறாகள். நான் எப்படி இதற்கு ஏற்பாடு செய்வது?" என்று துக்கிப்பான். அவன் மனைவி இருபத்தைந்து வயதுள்ளவள். அதிகப் படிப்பில்லாவிட்டாலும் புத்திசாலி. குடும்பம் அப்போதிருந்த நிலைமையைவிட இன்னும் கீழான நிலைமையி வில்லாத காரணம் அவளுடைய செட்டான குடித்தனந்தான். அவள் கணவனுக்கு அவ்வப்போது தேறுதல் சொல்லிக்கொண்டு உற்சாகப்படுத்துவாள். ஒருசமயம் நரன் கடன்காரர்களுடைய தொல்லை பொறுக்கமாட்டாமல் தற்கொலை செய்துகொண்டுவிடலாமென்று உத்தேசித்து, தனது அறையில் கயிற்றை மேலேகட்டி அதிலிருந்து தொங்க எணணினன். ஆனல் அறையில் குழந்தைகள் நடமாடிக்கொண்டிருந்தார்கள். சரி, ஏதேனும் குளமிருந்தால் அதில் விழுந்து உயிர் துறப்போமெனத் தீர்மானித்து, இரவு 9-மணிக்குக் கிளம்பினன். சந்தடி செய்யாமல்

தெருக் கதவைத் திறந்துகொண்டு இங்குமங்கும் பார்க்காமல் வேகமாய் நடந்தான். ஒரு மைலுக் கப்பால் குளம் தோன்றிற்று. கரையில் நின்றுகொண்டு "ஏ கடவுளே! உம்மை நம்பினோர் கைவிடப்படார் என்று சொல்லியிருக்கிறது. அது வெறும் ஏட்டுச் சுரைக்காய் போலும். இவ்வுலகத்தில் கிஞ்சித்தும் சௌக்கியமில்லை. இதோ என்னுடைய உயிரை மாய்த்துக் கொள்கிறேன். இனிமேலாவது என் குழந்தைகளும் மனைவியும் படும் அவஸ்தைகளைக் கண்ணுறாம லிருப்பேன். அவர்கள் எப்படியாவது பிழைத்துப் போகட்டும்." என்று பாயப்போனவன் தனக்குப் பின்னால் "எப்படி" என்று ஒரு குரலைக்கேட்டு திடுக்கிட்டு நின்றுவிட்டான். பின்னால் தன் மனைவி விழுந்தடித்து ஓடிவருவதைக் கண்டான். 'ஐயோ! என்ன காரியம் செய்யத்துணிந்தீர்! நீர் இறந்துவிட்டபின் மனைவி மக்கள் எப்படியாவது பிழைக்க முடியுமா? இப்போது அரைவயிறு கஞ்சியாவது குடித்துக்கொண் டிருப்பது போய் உறவினரிடம் வசைமொழி கேட்கவும் வேண்டுமா? யார் எங்களை ஆதரிப்பார்?" என்றழுதாள்.

நாரனுக்குத் துக்கமுண்டாயிற்று. மறுமொழி கூறாமல் மனைவியோடு வீடு திரும்பினான். திரும்பியவுடன் வெகுநேரம் மெத்தைமேல் உலாவிக்கொண்டு தலைகுனிந்தவாறே சோர்ந்து கொண்டிருந்தான். பின் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தான். இத்தனை வான்மீன்கள் உலாவுகின்றனவே. இவ்வுலகங்களில் என்னைப்போல் திண்டாடுபவர் இருக்கின்றார்களா வென யோசித்தான். திடீரென்று மேற்குத் திக்கைப் பார்த்தான். வெகு தூரத்தில் ஒரு பிரகாசமான விளக்கு எரிந்துகொண்டிருக்கக் கண்டான். இதென்ன புதுமை! இதுவரையில் இம்மாடிமேல் பலமுறை உலாவிக்கொண் டிருந்திருக்கிறோம். ஆயினும் இவ்விளக்கைப் பார்த்ததில்லையே. இன்று ஏதேனும் திருவிழாவாக விருக்குமோ? விளக்கு என்னவோ அருகாமையி லிருக்கிறது என்று யோசித்தான். பன்னிரண்டு மணிக்குப் படுத்துறங்கிக் காலையில் எழுந்தவுடன் மறுபடியும் விளக்கு எறிந்த திக்கை நோக்கினான். தான் முன்னாள் இரவு கண்டது கனவோ என்று யோசித்தான். தூரத்தில் விளக்கைக் காணோம். ஆனால் ஒரு ஸ்தூபி தோன்றிற்று. சூரியனுடைய கிரணங்கள் பட்டு அதன் உச்சியிலிருந்த தங்கக்கூண்டு பிரகாசித்துக் கொண்டிருந்தது. அது என்ன ஸ்தூபி என்று அவனுக்குப் புலப்படவில்லை.

அன்று உத்தியோகத்திற்குச் செல்லும் வழியில் தன்னுடைய நண்பர்களைக் கேட்டான். அவர்களில் சிலருக்குத் தெரியவில்லை. ஒரு மனிதன் "அதுதான் ஐயா. ஐசுவரியம் என்னும் திவ்ய நகரம். அந் நகரத்தைப்பற்றி நீர் இதுவரையில் கேள்விப்படாதது ஆச்சரியமா யிருக்கிறது" என்றான்.

"நான் இதுவரையில் கேட்டதேயில்லை" என்று பதிலளித்தான் நாரன்.

"அந் நகரம் தேவலோகம் போன்றது. வீதிகளெல்லாம் சலவைக் கற்களால் கட்டப்பட்டிருக்கும். வீடுகள் தங்கக் கூரைகளோடு கூடி யிருக்கின்றன. ஒருவருக்கும் கவலை கிடையாது. எல்லோருக்கும் போதுமான உணவு இருக்கிறது. அந் நகரத்தை யடைந்தவர் மறுபடியும் இவ்வூருக்குத் திரும்பமாட்டார்கள். அந்நகரத்தை யடையும் பாக்கியம் பெற்றவர்களே புனிதவான்கள்" என்றான்.

"அவ்வூருக்குச் செல்ல வழியாது?" என்றான் நான்.

"அவ்வூருக்கு இருப்புப் பாதை கிடையாது. வண்டிகள் போகக்கூடிய ரஸ்தாக்களுமில்லை. காட்டிலும், மேட்டிலும், ஆறுகளைக் கடந்துங்கொண்டும், மலைகள்மேல் ஏறியும் செல்லவேண்டும்" என்றான் அந் நண்பன்.

அன்றிரவும் விளக்கு ஜகஜ் ஜோதியாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. "எப்படியாவது அங்கேயே போய்விடுவேனாகில் நலமாகவிருக்கும். என் மனைவி உழைக்கவேண்டாம். என் மக்கள் வயிறு நிறைய உண்ணலாம். ஆனால் ஒருவருக்கும் அங்குப் போவதற்குத் தக்கவழி தெரியாதுபோலிருக்கிறதே" என்று வருந்தினன்.

மறுநாட்காலையில் கடைவீதியில் நானை ஒரு மனிதன் சந்தித்தான். அவன் வெகுநாட்களாக நானை யறிவான். அன்றையதினம் "அன்பனே! உன் மனதிலிருப்பதைச் சொன்னால் எனக்கென்ன கொடுப்பாய்?" என்றான். இம் மனிதன் பெயர் ஏஜெண்டு. "நீ சொல்வது சரியாயிருந்தால் பின்னால் யோசித்துக் கொள்வோம்" என்றான் நான். "உனக்கு இந்தக்ஷணம் ஐசுவரிய பட்டணத்திற்குப் போகவேண்டுமென்றிருக்கிறது" என்றான். நான் திடுக்கிட்டு, "எந்தயக்ஷணி அதை உனக்குச் சொல்லிற்று?" என்றான். ஏஜெண்டு சிரித்துக்கொண்டு "எப்படியாவது ஆகட்டும். நான் சொன்னது உண்மையானால் உன் எண்ணத்தை நிறைவேற்ற நான் உதவி செய்கிறேன்" என்றான். நானுக்கு உளம் பூரித்தது என்று சொல்லவும் வேண்டுமா? "நீர் எது சொன்னாலும் நான் செய்யத் தயாராயிருக்கிறேன்" என்றான்.

"நீர் வழியில் ஏற்படும் துன்பங்களுக்குத் தயாராயிருக்க வேண்டும். நேர்வழியில்லாததால் மலைகள்மீதும் பள்ளத் தாக்குகளிலும் முட்கள் நிறைந்த பாதைகளிலும் போகவேண்டும். இவ்வூருக்கு வெளியில் ஒரு கிழவனார் இருக்கிறார். அவர் பெயர் இன்ஷ்யூரென்ஸ். அவருக்கு இவ்வழி முழுவதும் தெரியும். அவரிடம் உன்னை அழைத்துச் செல்கிறேன். அவர் உன்னை அழைத்துக்கொண்டு ஐசுவரிய பட்டணத்தில் சேர்த்து விடுவார்" என்றான்.

பிரயாணம் அதுவும் தூரதேச பிரயாணமெனில் எல்லோரிடமும் சொல்லிக்கொண்டல்லவா போகவேண்டும். ஆகையால், நான் மறுநாள் அவ் ஏஜெண்டைக் காண்பதாகச் சொல்லிவிட்டு வீட்டிற்குச்சென்று மனைவியைக் குறித்து "பெண்ணே, நான் ஐசுவரிய பட்டணத்திற்குப் போகலாமென்றிருக்கிறேன். விடை கொடு" என்றான்.

பிரயாணமென்றவுடன் அவளுக்குத் திடுக்கிட்டது. என்ன பட்டணம்? ஏன் போகிறீர்? யாருடன் போகிறீர்? வழிச் செலவுக்குப் பணம் ஏது? என்றாள்.

நான் "ஐசுவரிய பட்டணமென்பது இங்கிருந்து வெகுதூரத்திலிருக்கிறது. அப்பட்டணத்தை யடைந்தால் நமக்கெல்லோருக்கும் க்ஷேமமுண்டாகும். நான் ஒரு தக்க மனிதனைப் பிடித்திருக்கிறேன். அவன் பெயர் இன்ஷியூரென்ஸ். அவனுக்கு வழி நன்றாய்த் தெரியுமாம்" என்றான்.

மனைவி உடனே "ஐசுவரிய பட்டணத்திற்கு இருப்புப் பாதையில்லையா? வேறு மனிதர் யாரும் போகவில்லையா?" என்றாள்.

நான் "அதைப்பற்றித் தெரியாது. இன்னும் அனேகர் அங்குப் போக யத்தனித்து வருவதாகக் கேள்வி. இருப்புப் பாதையோ, ரஸ்தாவோ இல்லையென்பது தெரியும்" என்றான்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த வேறு குடித்தனக்காரனாகிய உதாசீனன் என்பவன் "ஓய் நானே! என்ன சொல்லுகிறீர்? ஐசுவரிய பட்டணத்திற்கா போகப் போகிறீர்? யாருடன் செல்வதாக உத்தேசம்?" என்றான்.

நான்:—"இன்ஷியூரென்ஸ் என்பவனோடு."

உதாசீனன்:—(நகைத்து) "நல்ல ஆளைப் பிடித்தீர். அந்தக் கிழவனை நம்பிப் புறப்பட்டீரானால் அதோகதிதான். அக் கிழவனுக்கு ஒன்றும் தெரியாது. யார் துற்போதனை செய்துவிட்டார்கள் அவனோடுபோக? அந்தப் பயல் ஏஜெண்டு உம்மைப் பார்த்துப் பிதற்றினானோ?

நான்:—"ஏஜெண்டுதான் சொன்னான்."

உதாசீனன்:—"அவன் ஒரு மடையன். அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டு குதிக்கிறீரே. அந்தக் கிழவனுக்குக் கண்ணுமில்லை, காதுமில்லை. நள்ளிரவில் வழியிலுள்ள ஆற்றில் உம்மைத் தள்ளிவிட்டுத்தான் வந்து விடுவான். எனக்குத் தெரிந்த இரண்டுமூன்று பேர் அம்மாதிரி அவனிடம் சிக்கிக்கொண்டு பிரயாணம் புறப்பட்டுச் சில தினங்களுக்குள் இறந்துவிட்டார்கள். கிழவன் பதிலுரைக்காமல் விழிக்கின்றான். நல்ல காலமாய் நீர் பேசிக்கொண்டிருந்தது என் காதில் விழுந்தது."

நான் மனைவி:—"ஐயோ, என் விதிப்பயனை என்னென்பது? உமக்கு ஏன் இம்மாதிரி யோசனைகள் தோன்றவேண்டும்? கிழவனையும் கொலையாளியையும நம்பியா ஒரு காரியத்தைச் செய்வார்கள்? நீர் அப்படியெல்லாம் போவதில்லையென்று சொன்னாலொழிய நான் உமது பாதங்களிலேயே பிராணத் தியாகஞ் செய்துகொள்கிறேன்" என்று கண்ணீர்விட்டுக் கதறினாள்.

" நான் என்ன செய்வான்? அவர்களுக்காகவே தான் பிரயாணத்திற்குச் சம்மதித்ததை அவர்கள் மறந்துவிட்டதைப்பற்றி வருந்தினான். இருந்தாலும் மனைவி சொற்படி வாக்களித்து அவளைத் தேற்றினான்.

மறுநாள் ஏஜெண்டு இவனைக் கேட்டபோது, "மனைவி இந்தப் பிரயாணத்திற்கு உடன்படவில்லை. ஆகையால் நான் வரவில்லை" என்று சொல்லிவிட்டான். ஏஜெண்டும் அவனைச் சிறிது காலத்திற்குள் மறுபடியும் பார்ப்பதாகச் சொல்லிவிட்டுச் சென்றான்.

சிறிது தூரம் நான் போயிருப்பான். அப்போதுதான் பழைய நண்பனாகிய சோதனை யென்பவனைச் சந்தித்தான். அவனைக்கண்டு பல மாதங்கள் ஆயிற்றாகையால் யோக க்ஷேமாதிகளைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்துவிட்டு "அப்பா சோதனையே! நான் ஐசுவரியப் பட்டணத்திற்குப் போக விரும்புகிறேன். அங்கு அழைத்துச் செல்ல யாராவது முன்வருவார்களா" என்றான்.

சோதனை:—"சபாஷ்! நானும் அங்குப் போகவே நினைத்திருக்கிறேன். என்னோடு வா. இருவரும் ஒன்றாய்ப் போகலாம்" என்றான்.

நான்:—"ஆனால் வழி யெல்லாம் காடும் மலையுமாக விருக்கு மென்கிறார் களே!"

சோதனை:—"யார் சொன்னது? நீ ஏன் அவர்கள் இவர்கள் பிதற்று வதைச் சத்திய வாக்காக எடுத்துக்கொள்கிறாய்? இங்கிருந்து நல்ல ரஸ்தா போட்டிருக்கிறார்கள் ஒருமணி நேரத்திற்குள் போய்விடலாம். எனக்குத் தெரிந்த குதிரை வியாபாரி யொருவர் இருக்கிறார். அவரிடம் சிறந்த குதி ரைகள் இருக்கின்றன. இரண்டை வாடகைக்குப் பேசிக்கொண்டு நாமிரு வரும் போவோம். குதிரைகள் பந்தயத்தில் கெலித்தவை யாகையால் வெகு சீக்கிரத்தில் ஐசுவரிய நகரத்தை யடைந்துவிடலாம்."

நான்:—"அது மிகவும் நல்லவழியாகத் தோன்றுகிறதே. ஆனால் அனேகர் இம்முறையை அனுசரிக்கலாமே, ஏன் செய்யக் காணோம்?"

சோதனை:—(குரலைச் சற்றுத் தாழ்த்தி) ஒருவரிடமும் சொல்லாதே! நான் சொல்லும் மனிதன் குதிரை சாஸ்திரத்தில் பயிற்சிபெற்று குதிரைகளில் எது சீக்கிரம் ஐசுவரியப் பட்டணத்தைச் சேரும் என்று கண்டுபிடித்திருக்கிறார். அந்த ரகசியத்தை எல்லோருக்கும் சொல்லமாட்டார். என்னிடம் சொல்லி விடுவார். மற்றோர் அறிவதற்குள் நாம் போய்விடுவோம்."

நான்:—"எப்போது புறப்படவேண்டு மென்கிறாய்? என் மனைவியிடம் செலவுபெற்று வருகிறேன்."

சோதனை:—"இன்று சாயங்காலமே புறப்படுவோம். உனக்கு இன் றைக்குச் சம்பளம் வருமல்லவா. அதைக்கொண்டு வாடகைக்குக் குதிரைகளை வாங்கிக் கொள்ளலாம். ஆனால் நீ யாரிடமும் சொல்லவேண்டாம். ஐசுவரிய பட்டணத்தை யடைந்தவுடன் அங்கு ஒவ்வொருவருக்கும் தனி வீடொன்று சொந்தமாகக் கொடுக்கிறார்கள்; அதைப்பார்த்துவிட்டு இரவே திரும்பி வந்து விடலாம். உன் மனைவி மக்களுக்கு எவ்வளவு சந்தோஷம் விளைவிக்கும்? சொல்லாமல் உத்தியோக சாலையிலிருந்து நேராகக் குதிரை லாயத்தெருவில் இரண்டாம் நெம்பர் வீட்டிற்குவா. நான் அங்கு நிற்கிறேன். இருவரும் உள்ளேபோய் குதிரை பேசிக்கொண்டு கிளம்புவோம்" நானும் சம்மதித்து வீட்டிற்குச் சென்றான். உத்தியோகத்திற்குப் போகுமுன் "பெண்ணே! இன்று சாயங்காலம் நான் சற்றுநேரம் பொறுத்து வருவேன். கவலைப் படாதே. ஆனால் வரும்போது உனக்கு வியப்பை யுண்டாக்கும் செய்தியைக் கொண்டுவரப் போகிறேன்" என்றான்.

மனைவியும் என்ன செய்தியோ வென்று யோசனை செய்துகொண்டு இர வையும் எதிர் பார்த்தவளா யிருந்தாள்.

அன்றையதினம் நான் உத்தியோகசாலையில் சரியாகவே வேலை பார்க்க வில்லை. அடிக்கடி திடுக்கிட்டு இங்குமங்கும் பார்ப்பான். கடிகாரத்தை ஐந்து நிமிஷத்திற்கு ஒருமுறை பார்ப்பான். காரண மன்னியில் புன்னகை பூப் பான். சாயங்கால மானவுடன் சம்பளத்தை வாங்கிக்கொண்டு விரைந்து சென்றான் குதிரைலாயத் தெருவிற்கு. அனேகர் அதே திசகை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். சிலர் "நான் அந்த மத்ஸரேகைக் குதிரை மேல் தான் ஏறப் போகிறேன்" "நான் நீலவேணி மேலேயே கண்வைத்திருக்

கிறேன்." "நான் உச்சைவ்ரவஸையே நம்பி யிருக்கிறேன்" என்று பல விதமாக சொல்லிக்கொண்டு போனார்கள். நரன் சிறுசிறு கூட்டத்தோடு கலந்து கொண்டான். அங்கு நடந்த சம்பாஷணையினின்றும் அவர்களெல்லோரும் ஐசுவரிய பட்டணத்திற்குப் போகவே உத்தேசித்திருக்கின்றனர் என்று தெரிய வந்தது. சோதனை சொல்லியது சரியாகவே இருக்க வேண்டுமென்று நரன் பூர்ணமாக எண்ணினான்.

சிலர் முதல் நெம்பர் லாயத்திற்கும், சிலர் இரண்டாம் நெம்பர் லாயத்திற்கும் சிலர் மூன்றாம் நெம்பர் லாயத்திற்கும் சென்றார்கள். சோதனை குறித்த இடத்தில் நின்றிருந்தான். அவனைக்கண்டவுடன் நரன் உளம் பூரித்தான். சோதனை நரனை அழைத்துக்கொண்டு லாயத்திற்குள் சென்றான். லாயத்திற்குச் சொந்தக்காரனிடம் ஏதோ சொல்ல, அவனும் நரனைப் பிரீதியோடு வரவேற்று "நான்கு ரூபாய்கள் கொடும் நல்ல குதிரையைத் தருகிறேன். ஒரு நொடியில் போய் விடும்" என்றான். அவ்வாறேதானும் கூசாது கொடுத்து விட்டான். இரண்டு ஆட்கள் ஒரு குதிரையைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள். நரனும் ஏறிக் கொண்டான். "உன் கண்களை மூடிக்கொள் குதிரை வாயுவேகமாய்ப் பறக்கும். வேண்டுமென்றால் உன்னுடைய பணம் முதலியவற்றை குதிரையின் சேணத்தில் வைத்து விடு" என்று சோதனை போதித்தான். நரனும் தன்னுடைய சம்பளத்தை முழுவதும் உறையில் போட்டு வைத்தான். குதிரையும் ஓட ஆரம்பித்தது. கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்த நரன் சிறிது தூரத்திற்குள் அவற்றைவிட்டுக் குதிரை கழுத்தைப் பிடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. குதிரை அவ்வளவு வேகமாய்ப் போயிற்று. ரஸ்தாவையும் காணோம் வேறு ஜனங்களையும் காணோம். அங்குமிங்கும் அலைந்து திரிந்து விட்டுக் குதிரை ஒரு பள்ளத்தாக்கில் நரனை உதறித் தள்ளிவிட்டு ஓடிவிட்டது. நரன் மூர்ச்சையாய்க் கிடந்தான். கண் விழித்துப் பார்த்தபோது இரவு வெகுதூரம் ஆயிருந்தது. உடம்பெல்லாம் காயங்களும் அசாத்திய வலியுமாக விருந்தது. தான் எங்கிருக்கிறோனென்பதையும் அறிந்திலன். மெல்ல மெல்ல நடந்து சிறிது தூரத்தில் ஒரு வெளிச்சத்தைக் கண்டான். அங்குச் சென்றதும் ஒரு மனிதன் உட்கார்ந்திருப்பதைக்கண்டு தாகத்திற்குத் தண்ணீர் கேட்டுக் குடித்து, தான் தரித்திர பட்டணத்திலிருந்து மூன்று மைலுக்கப்பா லிருப்பதாகத் தெரிந்து விடை பெற்றுக்கொண்டு இரவு பன்னிரண்டு மணிக்கு வீட்டை யடைந்தான். வீட்டின் முன்பு வெஜெண்டு நின்றிருந்தான். "அன்பனே! குதிரை வழி சரியான வழியல்ல; நான் சொன்ன வழியே தக்கவழி" யென்று சொல்லிப் போனான்.

நரன் மனைவி "என்ன புதுமையைக்கொண்டு வந்தீர்?" என்றாள். நரன் துக்கமேலீட்டால் அழ வாரம்பித்தான். நடந்ததை யெல்லாம் ஆதியோடந்தமாய்ச் சொல்லி "அந்தோ! இந்த மாதச் சம்பளமெல்லாம் அந்தக் குதிரையிலேயே வைத்து விட்டேனே!" என்றழுதான். "இது வியப்பையுண்டாக்கும் சமாசாரமே" என்று மனைவியும் கருதி அவனைத் தேற்றினாள்.

(தொடரும்)

# மேனாட்டு விழுச் செல்வம்

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

1 ஆண்டவன் சித்தப்படி நடப்பதிலேயே நாம் ஆன்மசாந்தியைக் காண முடியும். தாந்தே.

2 பொதுப்பணம் புண்ணிய தீர்த்தத்தை ஒக்கும். ஒவ்வொருவரும் தம்மால் இயன்றமட்டும் அதில் கொஞ்சம் எடுத்துக்கொள்வர்.

3 கோழையாயில்லாதவன் வீரனாயிருக்க முடியாது. பெர்னார்டு ஷா.

4 வோர்ட்ஸ் வொர்த் என்னும் கவிஞர்பெருமான் இறந்தவுடன் ஒரு குடியானவன் "அவர் செய்து வந்த காரியத்தை அவர் மகன் நடத்தட்டுமே" என்று கூறினான். இவனை கவி யிலக்கணம் அறியா மூடன் என்று நாம் நகைக்கின்றோம்— ஆனால் "தந்தையின் சமயத்தைத் தனயனும் தழுவட்டுமே" என்று கூறும் நாம் மூடர் அல்லமோ? பெர்னார்டு ஷா.

5 எவனும் இன்னொருவனுடைய எஜமானனாயிருக்கப் போதுமான சற்குணம் பொருந்தியவனாகான். வில்லியம் மாரிஸ்.

6 உண்மை உரைப்பதே என் ஹாஸ்யமுறை. அதனிலும் அதிக ஹாஸ்ய ரசம் அமைந்தது அவனியில் கிடையாது. பெர்னார்டு ஷா.

7 வறுமையே தீமையில் தலைசிறந்ததும் குற்றத்தில் கொடியது மாகும். பெர்னார்டு ஷா.

8 மனிதரைச் சுதந்தரத்திற்குத் தகுதி யாக்குவது சுதந்தரம் ஒன்றே. க்ளாட்ஸ்டன்.

9 சிறு சீர்திருத்தங்கள் பெரியவைகளின் ஜன்ம விரோதிகளாகும். மார்லி.

10 என் தலைசிறந்த நண்பனிடம் எனக்கு அன்பு அதிகம். அவன் எவன்? வீரம் நிறைந்த பகைவனே. என் சக்திகளை எல்லாம் உபயோகிக்கும்படி என்னை எப்பொழுதும் தயாராய் வைத்திருப்பவன் அவனே. பெர்னார்டு ஷா.

11 தினந்தோறும் சிறு நன்மைகளுக்காக ஆன்மாவை விற்பதைத் தவிர வேறு என் செய்கின்றனர் மனிதர்? பெர்னார்டு ஷா.

12 நற்செயலை நாடிக்கொள். வழக்கம் அதை மனத்திற்கு ஒத்ததாக்கி விடும். புளூட்டார்ச்.

13 சிறு தொகையால் ஏற்படுபவன் கடனாளி. பெருந்தொகையால் ஏற்படுபவன் பகைவன். ஸெனீக்கா.

14 கடவுள் பார்த்தாலொப்ப மனிதரோடு வாழ்க. மனிதர் கேட்டா லொப்ப கடவுளோடு பேசுக. ஸெனீக்கா.

15 பிறர் நம்மை அறிந்துகொள்ள முடியாதபடி நடந்து கொள்வது நம் வழக்கம். அதன் முடிவு யாதெனில்—நாமே நம்மை அறிந்துகொள்ள முடியாதபடி நடக்கப்பயின்று விடுகிறோம் என்றதே. பிரஞ்சு பழமொழி.

16 உலகத்தாரைக் கவனியாது தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று கருதுவது பெரும் பிழை. ஆனால் தன்னைக் கவனியாது உலகத் தார் எதையும் சாதித்துக்கொள்ள முடியாது என்று கருதுவது அதனி லும் பெரும்பிழை. பிரஞ்சு பழமொழி.

17 கண் குருடு என்று இரங்குவது போலவே அறிவு சூன்யம் என்றும் இரங்க வேண்டும். செஸ்டர் பீல்டு.

18 மனிதர் இம்மைக்காக மறுமையையும், மறுமைக்காக இம்மையையும் ஒரு பொழுதும் முழுவதும் வேண்டாம் என்று விட்டுவிட மாட்டார் கள். ஸாமுவேல் பட்லர்.

19 பிறர் அறியாததை வைத்து அவர்களை மதித்தல் ஆகாது. அறிந்துள்ளதை எவ்வாறு அறிந்திருக்கின்றனர் என்பதை வைத்தே அவர்களை மதிக்க வேண்டும். பிரஞ்சு பழமொழி.

20 காலச் செலவும், வேலை செய்தலுமே உண்மையான துக்கத்திற்கு மருந்து. செஸ்டர் பீல்டு.

21 ஒரு சின்னஞ் சிறு தூசி கண்ணுக்கு வெகு சமீபத்தில் இருக்குமானால் அது உலக முழுவதையும் மறைத்து தன்னை மட்டுமே காண இடங் கொடுக்குமன்றோ? "நான்" என்பதைப்போல எனக்குத் தொந்தரவு கொடுக்கும் தூசி வேறு அறியேன். ஜார்ஜ் எலியட்.

22 நமது உணர்ச்சியின் தன்மை விசாலம் இரண்டின் அளவே நமது ஒழுக்கமாகும். ஜார்ஜ் எலியட்.

23 உன் வேலையிலும், உன் வேலையை நன்றாய்ச் செய்யக் கற்றுக்கொள்வதி திலும் பெருமை அடைதல் வேண்டும். ஜார்ஜ் எலியட்.

24 நமது நன்மையை அடையத் தவறி விட்டாலும் பிறர் நன்மை இருக் கவே செய்கின்றது. அதற்காக முயலுதல் தக்கதே. ஜார்ஜ் எலியட்.

25 ஒருவன் அபிப்பிராயத்தைக் குறித்துப் பெரிதும் ரோஷம் கொள்வது பல வீனத்தின் அடையாளம். ஹோம்ஸ்.

26 பிறர் உவக்கும் வண்ணம் நடந்து கொள்வதற்கான ஆசையும் அறிவும் ஏற்படுத்துவதே குழந்தைகளை கௌரவமானவராக வளர்ப்பதின் சார மாகும். ஹோம்ஸ்.

27 சத்தியத்தைக் கூறச் சக்திபெற்றிருப்பதே சமத்துவத்தின் சாரம். ஹோம்ஸ்.

28 ஆன்மாவின் கதவை ஒரு விருந்தாளிக்கு ஒரு முறை திறந்து விட் டால் பின்யாரெல்லாம் உள்ளே வந்து புகுவர் என்று கூறிவிட முடி யாது. ஹோம்ஸ்

29 ஆண்களைவிடப் பெண்கள் இருமடங்கு சமய உணர்ச்சி உடையவர். நாம் அவர்களிட மிருந்தே நமது மனித வுணர்ச்சியில் அதிகமான பாசத்தை அடைகின்றோம். அவர்கள் தருவது முக்கியமாக அவர்களுடைய அன்பின் மூலமாகவே. ஹோம்ஸ்.

30 அவளிடம் அளிப்பதற்கு அதிகமில்லை. ஆனால் அவள் கொடுக்கும் பொழுது அவள் கண்களில் ஒளி உலவுகின்றது. அதுவே ஆண்டவன் ஆசைப்படுவது. ஹோம்ஸ்.

31 அறிவிற் சிறந்தவர் அறத்திற் சிறந்தவரை மணத்தல் வேண்டும். ஹோம்ஸ்.

32 ஜலக்குமிழி தங்கக்கட்டிக்குச் சமான மாகுமானல் உயர்ந்த மூளையும் உண்மையான உள்ளத்திற்குச் சமானமாகும். ஹோம்ஸ்.

33 மேன்மை வேலையின் வெகுமதி. வேறெவ்விதத்திலும் அதை மனிதன் அடைய முடியாது. ஸர் ஜோஷுவா ரெய்னல்ட்ஸ்.

34 உண்மையே ஞானத்தின் உறைவிடம்.

35 தன்னை அடக்கிக் கொள்ளச் சக்தியற்றவன் சுதந்தரன் ஆகான். பித்தாகோரஸ்.

36 உண்மையாக இருக்கத் துணிக. ஒன்றிற்கும் பொய் வேண்டியதில்லை. பொய்யை விரும்பும் குற்றம் அதனாலேயே இரண்டு குற்றமாய் விடும். ஹெர்பர்ட்.

37 காலத்தை வீணய்க் கழித்தது உயிருடன் இருப்பு மட்டுமே. காலத்தை உபயோகித்ததே உண்மையில் வாழ்வாகும். யங்.

38 நமது செயலின் விளைவுகளை நாம் ஏற்றுக்கொள்ளும் முறையே நமது ஆன்மாவின் உயர்வை அளக்குங் கோல். மார்லி.

39 தர்மநெறி தவறியவரே தனியா யிருப்பவர். டைடெரொட்.

40 தீச்செயல் நம்மைத் துன்புறுத்துவது செய்த காலத்தி லன்று. வெகு காலம் சென்று அது ஞாபகத்திற்கு வரும் பொழுதுதான். அதற்குக் காரணம் அதன் ஞாபகத்தை ஒருபொழுதும் அகற்ற முடியாததே. ரூஸோ.

41 தரித்திரன் சுதந்தரனு யிருப்பது எப்பொழுதும் ஜனங்கள் நினைப்பது போல் அவ்வளவு எளிய தன்று. ரூஸோ.

42 வித்தையில் விருப்பமுடையவன் தன்னை முழுவதும் அதற்குத் தத்தம் செய்யவும் அதிலேயே தன் வெகுமதியைக் காணவும் திருப்தியுடையவனு யிருக்கவேண்டும். டிக்கன்ஸ்.

43 கல்வியின் லட்சியம் விஷயங்களை அடைவதன்று. ஒழுங்கு முறை அமைத்துக் கொள்வதே யாகும். தொழில் முறைக்கு அடிகோலுவது மன்று; உத்யோகத்தில் முன்னேறும்படி செய்வது மன்று. சான்றோனுகவும் அறிஞனுகவும் செய்வதேயாகும்—அவ்விருவரில் ஒருவனுகச் செய்ய அவனிடம் ஏதேனும் இருக்குமானல். ரஸ்கின்.

44 நடை எழுத—இசைபாட—உருவந்தீட்ட முழுவல்லமை பெற்றபொழுதே கல்வி முற்றுப்பெறும். ரஸ்கின்.

45 அறிவின் முதற்பாடம் ஐஸ்வரியத்தை வெறுப்பது. அன்பின் முதற் பாடம் ஐஸ்வரியத்தை அனைவருக்குமாகச் செய்வது. ரஸ்கின்.

46 ஆன்ம அபிவிருத்தி அடைந்தவரே இயற்கை எழிலை அனுபவிக்க இய லும். இசை, ஓவியம், இலக்கியம் மூலமாகத்தான் அந்த அபிவிருத் தியை அளிக்க முடியும். ரஸ்கின்.

47 ஜனங்கள் தம்மைப்போல் பிறரையும் "பாவிக்க" மட்டும் முடியுமானால், தம் விஷயத்தைப் போலவே பிறர் விஷயத்தையும் கவனிக்க ஆரம் பித்து விடுவர். ரஸ்கின்.

48 தொழில் இல்லாத வாழ்வு குற்றம்; கலையில்லாத தொழில் மிருகத்தனம். ரஸ்கின்.

49 மனிதனுடைய மனோசிருஷ்டியில் தலை சிறந்தது வாக்குக் குன்றாத வாழ்வுடைய மனிதனுடைய உருவமே. ரஸ்கின்.

50 சரியான ஊழியமே பரிபூரண சுதந்தரம். ரஸ்கின்.




# “காணாமற்போகாத பணப்பை”

(கிருஷ்ணகாந்தன்.)

திவான் பகதூர் மாடசாமிக் கோனாரின் சிரம் 'கிர்'ரென்று சுழன்றது. கண்கள் இருளடைந்தன. அவருக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. ஆனால் எப்படித் தோன்றுமென்று நீங்களே சொல்லுங்கள். பணப்பை காணாமற் போய்விட்டால் எவருக்குமே கதிகலங்கிப் போய்விடாதா? அப்படியும் ஒரு ரூபாயா அல்லது இரண்டு ரூபாயா?—தொலைந்து போயிற்றென்றிருப்பதற்கு. 6000 ரூபா அல்லவா, ஆ! பதினொரு லட்சத்து ஐம்பத்திரண்டாயிரம் பைசா!! இதை வைத்துக்கொண்டு 'ஸர்' பட்டத்திற்கு வழிசெய்திருக்கலாமே! “துரதிருஷ்டவசமாக” இந்தியாவிற்கு சுயராஜ்யம் கிடைத்தால் பிரதிகாவலன்கூட ஒரு வருஷம் உழைத்தாலன்றோ அந்தத் தொகையைக் கண்ணால் பார்க்கலாம். இவ்வாறெல்லாம் நினைக்க நினைக்க அவரது தலை சுழற்றலின் வேகம் இடைவிடாது அதிகரித்துவந்தது.

பணம் என்றால் பிணமும் வாய்திறக்கும் என்பார்கள். இது வாஸ்தவம்தானா வென்பதைப் பரீக்ஷிக்க இதுவரை எனக்குச் சந்தர்ப்பம் நேர்ந்ததில்லை. வியவஹாரத்திற்காகப் பழமொழி பொய்யென்றே வைத்துக்கொண்டாலும் 'பணம்' என்றவுடனே உயிருள்ளவர்கள் வாயைத் திறப்பதை பிரத்தியக்ஷமாகப் பார்த்திருக்கிறோம். ஆனால் மாடசாமிக் கோனார் சம்பந்தப்பட்டவரை அவரது சவம் எரிக்கப்பட்டுவிட்டாலுங்கூட பணமென்றவுடனே அவரது அஸ்திகள் எழுந்து நின்று ஆனந்த நிர்த்தனம் புரியும் என்று வேண்டுமானால் காலணா பந்தயம் வைத்துக் கூறுகிறேன். ஏதோ நான் திவான்பகதூரின் பணத்தாசையைக் கண்டு நகையாடுவதாக எண்ணிவிடவேண்டாம். வெற்றிலை பாக்குக்காக வைத்திருந்த காலணா மடியிலிருந்து விழுந்தவுடன் கடையில் காலணாவிற்கு மெழுகுவர்த்தி கடன் சொல்லி வாங்கி அரைமணி நேரம் தேடிய பிறகு “பிச்சைக்குப் பிச்சை போனதுமன்றி அரைக்காசு நாமமும் போன கதையாய்” அரையணா நஷ்டமடைந்த அடியேனுக்கு அந்த உரிமை எள்ளளவும் கிடையாதென்பதை நான் நன்கு அறிவேன்.

* * *

மறுநாள் சென்னையில் வெளியாகும் தினசரிப் பத்திரிகைகளெல்லாவற்றிலும் பின்வரும் விளம்பரம் காணப்பட்டது:—

“நானது ஜூன் மாதம் 9-ந் தேதி மாலை 7-30 மணிக்கு சைதாப்பேட்டைக்கும் சென்டிரல் ஸ்டேஷனுக்கும் மத்தியில் என்னுடைய பணப்பை காணாமற் போய்விட்டது. அதில் 5000 ரூபா

நோட்டுகளாகவும் 1000 ரூபா ரொக்கமாகவும் இருந்தது. அதைக் கீழ்க்கண்ட விலாசதாரிடம் கொண்டு சேர்ப்பதற்குத் தகுந்த சன்மானம் அளிக்கப்படும்.

திவான்பஹதூர். மாடசாமிக் கோனர்,
'மாடமஹால்'
சைதாப்பேட்டை சென்னை.

திவான்பஹதூர் கோனரை அறியாதார் சென்னைமா நகரிலேயே இல்லை. அப்பட்டணத்தில் அவர் மஹா பிரபலஸ்தர். பெரிய புஸ்தக வியாபாரி. நகரசபை, தாலூகாபோர்டு, ஜில்லாபோர்டு, என் சென்னை சர்வகலாசாலை, செனெட் சபை, சைதாப்பேட்டை கருத்தடைலீக், ரிக்ரியேஷன் கிளப் முதலியவற்றி லெல்லாம் அவர் அங்கம்வகிப்பவர்.

பணப்பை போன துக்கத்திலும் கோனரவர்கள் பத்திரிகைகள் படிப்பதை நிறுத்தவேயில்லை. மறுநாள் 'சுதர்க்சமித்திரன்' பத்திரிகை வந்ததும் முதலில் 'கண்டெடுக்கப்பட்டவை' என்ற பத்தியை படிக்க ஆரம்பித்தார். அதில் தனது பணப்பையைப் பற்றிய செய்தி கட்டாயம் வந்திருக்குமென அவர் எதிர்பார்த்தார். ஆனால் அவரது ஆசையில் பாவம், மண்தான் விழுந்தது. சிலேட்டுக் குச்சி, பொடி மட்டை (டப்பிகூட இல்லை!) மில்லர் பூட்டுச் சாவி (ஓரத்தில் ஒடிந்தது) கைக்குட்டை, காலிஸோப் பெட்டி முதலியவைகளைப் பற்றியே செய்திகள் வெளிவந்திருந்தன. கோனரின் பணப்பையைக் குறித்து எவ்விடத்தும் எவ்விதத் தகவலும் காணோம்.

* * *

மறுநாட் காலை 7-30-மணி கோனர் தனது இஷ்ட தேவதையாகிய கிருஷ்ணனுக்குப் பூஜை செய்துவிட்டு வெளியில்வந்தார். கோனர் சுயமரியாதைக் கட்சியைச் சேர்ந்தவரென்பதை தயவுசெய்து மறந்துவிடுங்கள். அப்பொழுது போலீஸ் இன்ஸ்பெக்டர் துரை ராஜசிங்கம் அவருக்காக வெளியிற் காத்துக்கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டரும் கோனரும் பால்ய முதலேயே ஆப்த நண்பர்கள். துரை ராஜசிங்கம் மஹா 'ஷோக்' பேர்வழி. இப்பொழுதும் ஆனந்தஸ்வரூபம்தான். ஆனால் இன்றோ அவரது முகத்தில் கடுகு வெடித்தது.

இதைக் கண்டதும் கோனருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "அப்பனே உயிர்போனாலும் போலீஸான் கோபத்திற்கும், பார்ப்பார் கோபத்திற்கும் ஆளாகிவிடாதே" என்று அவரது தகப்பனார் மரணத்தறுவாயில் திருவாய் மலர்ந்தருளிய ஞானோபதேசம் ஞாபகத்திற்கு வந்தது.

"குட்மார்னிங் ஸார்" என்று துரைராஜசிங்கம் சிறிது கோபமாகவே கூறினார். அந்தப் பிரளய காலருத்ரனுக்கு பதில் வந்தனம் செய்துவிட்டு "என்ன சமாசாரம்? ஏதோ வொரு மாதிரியாக விருக்கிறீரே" என்று கோனர் குசலப்ரச்னம் செய்தது துரைராஜசிங்கத்திற்கு எரிகிற நெருப்பில் எண்ணெய் விட்டமாதிரி யிருந்தது.

"மாதிரி என்ன, எல்லாம் உங்கள் தற்கால தர்பார்தான் ஒருமாதிரியாக விருக்கிறது. பணப்பை தொலைந்துபோனால் போலீஸில் எழுதிவைக்கக் கூடாதோ? நாங்கள் என்ன, சாம்பிராணிகள் தானே! அவ்வாறுதான் நாவ

விஸ்டுகளெல்லாம் எங்களைப் பற்றி எழுதிவருகிறார்கள். அந்தக் கோஷ்டியில் நாவல்களைப் பிரசுரிக்கும் தாங்களும் சேர்ந்துவிட்டாற்போலிருக்கிறது" என்று இன்ஸ்பெக்டர் ஆர்ப்பாட்டம் செய்தார்.

கோனருக்குத் தன் போலீஸ் நண்பனின் கோபத்திற்கு காரணமாய் நடந்துகொண்டதைப் பற்றி ஒரு பக்கம் வருத்தம்தான். ஆயினும் என்செய்வது? ஆகவே சிங்கத்தைச் சாந்தப்படுத்தி வெளியே அனுப்பினர்.

* * *

இன்ஸ்பெக்டர் வெளிச் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் சுதர்மாவில் பிரஹஸ்பதி நுழைந்தார். என்ன விழிக்கின்றீர்கள்? அர்த்தமாகவில்லையா? சரி, கோனரின் குடும்பப் புரோஹிதர் மார்க்கடேஸ்வர ஐயங்கார் உள்ளே பிரவேசித்தார். ஐயங்காரைத் தரிசித்ததும் கோனர் வழக்கம்போல் 'மஹா பாக்கியம், மஹா பாக்கியம்' என்று கூறிக்கொண்டே கும்பிடுபோட்டார். புரோஹிதரும் 'தயாஸ்து' (கோனருக்கு நல்ல வேளையாக சமஸ்கிருதம் தெரியாது. இல்லாவிட்டால்......) என்று கூறிக்கொண்டே ஆசீர்வதித்தார்.

ஐயங்கார்:—என்ன பணப்பை காணுமற் போய்விட்டதாமே, என்ன கஷ்டம். கொஞ்சம் போதாத காலம். ராகு திசையில் கேது புக்தி. சனி அனுக்ரஹம். கொஞ்சம் பொருள் விரயம் ஏற்படவேண்டிய காலம். என்ன செய்வது?

கோனர்:—சுவாமிகள், பணப்பை எப்பொழுது கிடைக்கும் என்று குறி பார்த்துச் சொல்லுங்கள்.

ஐயங்கார்:—108-க்குள் ஒரு நம்பர் சொல்லும்.

கோனர்:—47.

ஐயங்கார்:—47 ஆ? சரி. 47-ல் இருப்பு 37. 37-ம் 18-ம் 56; 56-க்கு மீனம். மீனம் மேஷம் விருஷபம். 56-க்கு மேஷத்தில் சூரியன் மீனத்தில் கேது. சரி, சரி, இன்னும் 3 தினங்களுக்குள் பணப்பை அகப்பட்டுவிடலாம். (இல்லாவிட்டால் போனதுதான்!)

* * *

ஐயங்கார் தக்ஷிணை பெற்றுக்கொண்டு வெளியேறியதுதான் தாமதம். உடனே தபாற் சேவகன் உள்ளேவந்தது 'அப்பாடா' என்று அலுப்புடன் சுமார் 100 அல்லது 150 கடிதங்களை கோனரின் மேஜைமீது போட்டான். கொஞ்ச நேரம் சென்றபின் தபாற்கார ராயரும் செலவுபெற்றுக் கொண்டு (அதாவது செலவிற்குப் பெற்றுக்கொண்டு) நகர்ந்தார். கடிதங்கள் எல்லாம் அவர் நண்பர்களிடமிருந்து வந்திருந்தன. திவான்பகதூருக்கு திரவிய நஷ்ட மேற்பட்டதைக் கேட்டு ஒவ்வொருவரும் தாங்கள் அடைந்துள்ள துக்கத்தைப் பற்றி விவரமாக எழுதியிருந்தனர். தென்னை மரத்தில் தேள் கொட்டினல் பனைமரத்தில் நெறி கட்டியே தீருமன்றோ!

கோனருக்கு ஒவ்வொரு கடிதமாகப் பிரித்து படிப்பது பெருங் கஷ்டமாகத்தானிருந்தது. ஆனல் தொல்லை இத்துடன் ஒழிவதாகக் காணும். 20 அல்லது 25 நிமிஷங்களுக் கொருதரம் தந்திச் சேவகன் வந்து 4, 5 தந்திகளைக் கொடுத்துக் கொண்டேயிருந்தான். கையெழுத்துப் போட்டுத் தந்தி

களை வாங்குவது கோனருக்கு மஹா சிரமமாயிருந்தது. எல்லாம் துக்கம் விசாரிக்கும் தந்திகளே!

* * *

இரண்டு தினங்களாகக் கணவன் ஒருவாறிருந்ததையும், காலையில்போலீஸ் இன்ஸ்பெக்டர் கௌசிகாவதார மெடுத்துக் காட்சியளித்ததையும், பூசாரி ஐயங்கார் வந்து தரிசனம் கொடுத்துச் சென்றதையும், மற்றும் தந்திகளும், தபால்களும் ஏராளமாக வருவதையும் கவனித்த காளியம்மாளுக்கு (மன்னிக்கவும். தயவுசெய்து மூன்றுல் திவான்பகதூரிணி என்று சேர்த்துக்கொள்ளவும்) அடிவயிற்றில் இடிவிழுந்த மாதிரியாகிவிட்டது.

அந்த அம்மாள் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கித் தவிக்கலானாள். சீமையில் படிக்கச் சென்றிருக்கும் தன் மகனுக்கு என்ன நேரிட்டதோ, அல்லது அசௌக்கியமாயிருந்த தனது மாமனுக்கு யாதுநேரிட்டதோ, அன்றி அம்மாவும் அப்பாவும் வழக்கமாகப் பிடித்துக்கொள்ளும் சண்டை இந்தத் தடவை முற்றிப்போய் போலீஸ் வரையில் போய்விட்டதோ என்ன இழவோ தெரியவில்லையே என்றெல்லாம் பிரலாபித்தாள்.

மணி 3 அடித்தது. மாடசாமிக் கோனர் ஹாலை விட்டு வெளிக்கிளம்புவதாகக் காணோம், ஏதோ அவசர அவசரமாக எழுதிய வண்ணமிருந்தார். இவ்வளவு துரிதமாக வேலை பார்த்தால் ஸென்ஸஸ் ஆபீஸில்கூட மாதம் ரூ. 50 சம்பாதித்துவிடலாம்.

விஷயத்தை அறிய ஆவல்கொண்டு துடித்த திவான்பகதூரிணி வேலைக்காரிக்குப் பதிலாக 'காபி' எடுத்துக்கொண்டு ஹாலில் பிரவேசித்தாள். கோனரோ மெய்மறந்து வெள்ளைத்தாளை கருப்பாக்குவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார். மனைவி நாலைந்து தடவை உரத்திக் கூப்பிட்ட பின்னரே அவருக்கு பிரக்ஞை வந்ததென்று கூறலாம்.

கணவனிடம் காபி கோப்பையைக் கொடுத்துவிட்டு 'என்ன சமாசாரம் இவ்வளவு தடபுடல்' என்று கேட்டாள் காளியம்மாள். கோனரும் பணப்பை காணமற் போனதிலிருந்து எல்லா விஷயங்களையும் ஆதியோடந்தமாகக் கூறித் துக்கம் விசாரித்த நண்பர்களுக்குப் பதில் எழுதிக்கொண்டிருப்பதாகவும் தெரிவித்தார்.

ரொம்ப நன்றாயிருக்கிறது. என்ன மறதி, என்ன அசட்டுத்தனம். அன்று மாலை வீட்டைவிட்டுப் புறப்படும்பொழுது சகுனம் சரியாயில்லை என்று சொல்லிப் பணப்பையை என்னிடம் கொடுத்து உள்ளே பத்திரமாக வைக்கச் சொன்னீர்களே! இதோ அதைக்கொண்டு வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு திவான்பகதூரிணி பணப்பையுடன் திரும்பிவந்து பையை நீட்டிக்கொண்டே ''எங்கே நீங்கள் அளிப்பதாக விளம்பரம்படுத்திய பரிசு?'' என்று கேட்டாள்.

''இந்தா வாங்கிக்கொள்'' என்று சொல்லிக்கொண்டே கோனர் ஆசனத்திலிருந்தெழுந்து தன் மனைவியை இறுகத் தழுவி முத்தமிட்டார்.

''பேஷ், நல்ல பரிசு. வேறேயாராவது பையைக் கண்டெடுத்திருந்து அவருக்கு இந்தப் பரிசை நீங்கள் கொடுக்க முன் வந்தால் அப்பொழுது தெரியும் சேதி'' என்று நகைத்துக்கொண்டே கூறினாள் காளியம்மாள்.

"ஏதேது, காளியம்மனும் சிரிக்குமா?" என்று நகைத்தார் கோனாரும்.

*　　　*　　　*

கதை இத்துடன் முடியவில்லை. மறுநாள் பத்திரிகைகளில் திவான் பகதூர் தம் பணப்பை திரும்பக் கிடைத்துவிட்டதாகவும் அதைக் குறித்து துக்கம் தெரிவித்த நண்பர்களுக்கு தமது மனமார்ந்த வந்தனத்தை தெரிவிப்பதாகவும் பிரசுரித்திருந்தார்.

அவ்வளவுதான். இப்பிரசுரம் வெளியாகி 3-மணி நேரம் ஆகவில்லை. அதற்குள் மார்க்கடேஸ்வர ஐயங்கார் சன்மானம் பெறுவதற்கு வந்துவிட்டார். அவரது ஜோசியம் பலித்துவிட்டதல்லவா?

"பலிக்கவே இல்லை" என்று நீங்கள் கூறலாம். அப்படியானால் உங்கள் புத்தி கூர்மைக்கு நான் இரங்கவேண்டியதுதான். அவர் சொன்னபடி பணப்பை திரும்பக் கிடைத்துவிட்டது; பத்திரிகைகளில் விளம்பரம் செய்தது, பதில் கடிதங்கள் எழுதியது, ஐயங்காருக்கு தக்ஷிணை கொடுத்தது இவையெல்லாம் பொருள் விரயமில்லாமல் வேறென்ன? ஆகவே ஐயங்கார் 15-9-4 ரூ. சன்மானம் பெற்றது முற்றிலும் நியாயம்தான். இன்னும் ஒத்துக்கொள்ள மாட்டீர்களா? சரி, நாம் துவந்துவயுத்தம் செய்து ஒருகை பார்த்துவிடுவோம். உங்கள் நிறை 85 பவுண்டுக்குட்பட்டிருந்தால் உடனே தெரிவியுங்கள்!

# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

இக்கட்டுரையில் இருப்பது மததூஷணை யென நினைக்கவேண்டாம். எனக்கு மதத்தைப்பற்றி தெரிந்ததே வெகு கொஞ்சம். அப்படி யிருக்க நான் தூஷிப்பது எவ்வாறு? எதைத் தூஷிப்பது, எதைப் போற்றுவது என்று தெரிந்தா லல்லவோ? அந்தோ! பாரத மாதாவே! உன் மக்களில் எத்தனை கோடிகள் என்னைப்போல் மதத்தின் தாத்பர்யத்தை யறியாமல் ஏதோ மூட அபிப்பிராயங்களைக்கொண்டு காலங் கழிக்கிறார்கள்! ஆஹா! ஹிந்து மதம் பண்டைக்காலத்திலிருந்து வழங்கி வருவது எவ்வளவு மேன்மையானது! எத்தனை சாஸ்திரங்கள், எத்தனை அரிய பெரிய நூல்கள்! பிறருக்கு இம்மதத்தை அறிய முடியாது என்று நமது தேசத்தில் பலர் சொல்லிக்கேட்கிறோம். ஆயினும் இப்படித் திருவாய் மலர்ந்தருளும் மஹான்களில் எவரும் ஊர் ஊராகச் சென்று ஹிந்துமத மென்பது இப்படி, அப்படி யென்று தெளிவாக எடுத்துரைக்க லாகாதா!

நிற்க, மேலே கோரியபடி, தயவு செய்து நான் சொல்வதை பக்ஷபாத மில்லாமல் படிக்குமாறு மறுபடியும் கேட்டுக் கொள்கிறேன். இவ்வுலகம் தோற்றத்திற்குத் தட்டையாக விருந்தாலும் உண்மையில் உருண்டையா யிருக்கிறதென்று சிறுகுழந்தைகளும் அறிந்திருக்கின்றன. இதன் வெளிப் பாகத்திலேயே நாம் வசிக்கிறோம். பூமிக்குள் நெருப்பிருக்கிறதென்று நமக்குத் தெரியும். சிறிது தோண்டும்போதே உஷ்ணம் தெரிகிறது. இன்னும் அதிகமாகத் தோண்டினால் உஷ்ணம் அதிகரிக்கின்றது. உலகத்தின் வயிற்றில் நெருப்பு எரிந்து கொண்டிருப்பதற்கு அத்தாக்ஷி எரி மலைகளே இவை பூமியின் வயிற்றிலிருந்து அக்கினியைக் கக்குகின்றன. ஒரு நெருப்புத்துண்டை எடுத்து வைத்தால் சிறிது நேரத்தில் மேலெல்லாம் சாம்பல் மூடிக்கொள்கிறது. இச்சாம்பலை ஊதிவிட்டு வைத்தால், மறுபடியும் சாம்பல் தோன்றுகிறது. இப்படியாக சில நிமிஷங்களில் நெருப்பு முழுவதும் அவிந்து குளிர்ந்து விடுகிறது. நமது உலகமும் இவ்வாறே முதலில் முழுவதும் நெருப்பாக இருந்தது. அப்போது ஜீவராசிகள் எதுவும் தோன்றவில்லை. தோன்றுவது எங்ஙனம்? அனேக ஆயிர வருஷங்கள் பொறுத்து பூமி சற்றே குளிர்ந்தது, சுற்றுவட்டமாக நிற்க நிழல் உண்டாயிற்று. பின்னும் பல ஆயிரமாண்டுகள் பொறுத்து சிறிது குளிர்ச்சி யுண்டாயிற்று. இப்போதும் சிறிது சிறிதாகக் குளிர்ச்சி வளர்ந்து கொண்டே போகிறது. முடிவில் பூமி முழுவதும் குளிர்ந்து போய் மனிதர் சஞ்சரிக்க முடியாமற் போகும்,

ஆகாயத்தை இரவில் பார்ப்போமாயின், நக்ஷத்திரமண்டலம் தோன்றுகிறது. எத்தனைகோடி நக்ஷத்திரங்கள்! இவைகளெல்லாம் என்ன? ஒவ்

வொன்று ஒவ்வொரு மஹானு? உலகத்தில் நல்ல நடத்தை யுடனிருந்தால் நக்ஷத்திர மாகிவிடலாமா? அன்று. அன்று ஒவ்வொரு நக்ஷத்திரமும் ஓர் உலகம். நமது பூமியைப்போல் அதுவும் ஒன்று. அவ்வளவு சிறியதாக விருக்கிறதே! ஆம்! அது அநேக ஆயிரம் மைல்களுக்கப்பால் இருக்கிறது. சூரியனின் வெளிச்சம் நமக்கு வருவதற்கு ஏழரை நிமிஷங்கள் ஆகின்றன. சூரியனுக்கும் நமக்கும் ஒன்பது கோடியே முப்பது லக்ஷம் மைல் தூர மிருக்கிறது. சூரியன் நமக்கு எவ்வளவு பெரிதாகத் தோன்றுகிறது. நக்ஷத்திரம் சூரியனைவிட தூரமாக இருக்கவேண்டும். சில நக்ஷத்திரங்களிலிருந்து நமக்கு வெளிச்சம் வர மூன்று வருஷங்கள் ஆகின்றன. சில நக்ஷத்திரங்களிலிருந்து வெளிச்சம் வர 200-வருஷங்கள் ஆகின்றன. சிலவற்றிலிருந்து வர, இரண்டு லக்ஷம் வருஷங்கள் ஆகின்றன! என்ன ஈசனின் சக்தி! இப்படியெல்லாம் இருந்தால் நக்ஷத்திரங்களில் சில சூரியனைவிடப் பெரிதாக இருக்கவேண்டுமல்லவா? அப்படியே சில பெரிதாக இருக்கின்றன. நமது சூரியன் சில சூரியன்களுக்குக் கடுகு தேங்காய்க் கிருப்பதுபோல் இருக்கிறதாம். ஆனல் நாம் நமது சூரியனைச் சுற்றும் நக்ஷத்திரங்களையே கவனிப்போம். சூரியனை உலகம் சுற்றுகிறதென்று குழந்தைகளுக்கும் தெரியும். அதேபோல் மற்ற கிரகங்களாகிய சுக்ரன், குரு, செவ்வாய், புதன், சனி முதலியவும் மற்ற நக்ஷத்திரங்களும் சூரியனைச் சுற்றுகின்றன. சூரியன் சுற்றுவதில்லையோ? நமது பிரபஞ்சம், அதாவது மேற்சொன்ன கிரகங்கள் நக்ஷத்திரங்கள் உள்பட எடுத்துக் கொண்டால் சுற்றுவதில்லை. ஆனல் நமது சூரியனும் வேறு சூரியனைச் சுற்றுகிறது. அச்சூரியன் தன் பரிவாரங்களோடு வேறு சூரியனைச் சுற்றுகிறது. அப்படியே எல்லாம் சுற்றிக்கொண்டிருக்கின்றன. நமது பூமி எதன்மேல் நிற்கிறது. பூமாதேவி யென்பவள் தோள் மீதா, அல்லது ஆதிசேஷனின் தலைமீதா, அல்லது கூர்மத்தின்மேல் நிற்கும் யானையின் மீதா? அப்படிக் கொன்று மிருப்பதாகத் தெரியவில்லை. இருந்தால் உலகத்தைச் சுற்றிவரும் கப்பல்களில் செல்பவர் எவராவது கண்டுபிடித்திருப்பர். அவர்கள் இல்லாவிட்டாலும் ஆகாய விமானங்களில் சென்று உலகத்தைப் படமாகப் பிடிக்கும் எவராவது கண்டுபிடித்திருப்பர். இவர்களுக்கெல்லாம் தெரியாமல் இருக்கலாகாதா? தெய்வத்தை மனிதன் பார்க்கமுடியுமாவெனில் அது விஷயம் எனக்குத் தெரியாது. என் மூளைக்கு அது எட்டவில்லை. உலகத்தின் இரகசியத்தை அறியவே கண்களும் பூதக் கண்ணாடிகளும் இருக்க இவை யன்னியில் இருக்கக் கூடாதாவென்றால் என்ன சொல்வது? அப்படியில்லாவிட்டால் எப்படி உலகம் நிற்கிறது? அந்தரத்தில் நிற்க முடியுமா? உலகத்திற்கும் மற்ற கிரகங்களுக்கும் ஒன்றை யொன்று இழுக்கும் சக்தியிருக்கின்றது. இச்சக்தியினாலேயே அவை விழாமல் நிற்கின்றன. மரத்தினின்றும் விழும் பழம் கீழேவிழுவானேன்? மேலே போகலாகாதா? பூமி சுற்றுகிறதே. நாம் ஏன் கீழே விழுவதில்லை? நம்மைப் பூமி இழுக்கிறது. அதே மாதிரி நக்ஷத்திரங்களில் ஒன்றாகிய பூமியும் மற்றவற்றை இழுப்பதோடு இழுக்கப்படுகிறது.

நமது பூமிக்கு ஒரு சந்திரன் இருக்கிறது. சந்திரன் பூமியைச் சுற்றுகிறது. சந்திரன் ஏன் இவ்வளவு குளிர்ச்சி? ஒருகாலத்தில் சந்திரனும் உஷ்ணமாகவே இருந்தது. இப்போது முழுவதும் பனிக்கட்டியாகிவிட்டது. அதன்மேல் தோன்றும் உருவம் என்ன? மானு, மனிதனு? அன்று, அன்று, மலைகள்! ஒருகாலத்தில் நமது பூமியும் குளிர்ச்சியாகி ஜீவராசிகளற்றுப் போன

பிறகு, வேறு உலகத்தினின்றும் பார்த்தால் நமது இமயமலையும் அவ்வாறு தோன்றும் போலும்!

குருவுக்கு நான்கு சந்திரர்களிருக்கின்றன. குரு நமது உலகத்தைவிட மிகப் பெரிது. சூரியனுக்கு அடுத்தாற்போல் அதுவே இப்பிரபஞ்சத்திலுள்ளவற்றில் பெரிய உலகம். சனிக்கு எட்டுச் சந்திரர்களாம்! நஞ்சுடைமை தானறிந்து நாகங்கரந் துறையும் அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப் பாம்பு என்னுர்கள். சனி நம் மானிடரைப் படுத்தும்பாடு நமக்குத் தெரியும், இவ்வளவு துஷ்ட சுபாவமிருந்தும் இதோ இருக்கிறேன் என்று சொல்லி எட்டு சந்திரனைக் கொண்டு இடைவிடாது தன்னைப் பார்க்கும்படி செய்கிறது போலும்! இக்கிரகங்களுக்கும் சீதோஷண ஸ்திதி, சமுத்திரங்கள், உயிருள்ள ஜந்துக்கள் எல்லாமுண்டு என்று கண்டுபிடித்திருக்கிறுர்கள். ஜோஸியத்தாலல்ல, சாஸ்திர ரீதியாய்—நமது ஆறு சாஸ்திரங்களாலல்ல. கணித ரஸாயன முதலிய சாஸ்திரங்களால். பல விஷயங்களை நமது உலகத் தோற்றங்களைக் கொண்டே ஊகித்து அறியலாம். அவ்வுலகங்களிலும் நமது உலகத்திலிருப்பதுபோல் இருப்பதால் அவை நமது உலகத்திலுள்ள விஷயங்களைப் பெற்றிருக்க வேண்டுமென நிர்மாணிக்கலாம். ஆனுல் உயிருள்ள ஜந்துக்கள் யாவும், நமது உலகத்திலிருப்பவைபோல் இருக்கவேண்டியதில்லை. அந்தந்த உலகத்தின் அமைப்பு சீதோஷ்ண ஸ்திதி முதலியவற்றிற்குத் தக்கபடி தேக அமைப்பும் இருக்கும்.

நிற்க, ஒரு மரத்துண்டை ஜலத்தில் படும்படி வைத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். சில தினங்களில் அக்கட்டையில் எத்தனை ஆயிரம் வெள்ளை எறும்புகள்! செல்லரிப்பதாகச் சொல்கின்ருேம். இஜ்ஜீவராசிகள் எப்படி உற்பத்தியாயின? பிரம்மாவோ வேறு சிருஷ்டிக் கர்த்தாவோ அல்லது விசுவாமித்திரரோ "என்ன ஐயாயிரம் ஆத்மாக்கள் நிற்கின்றனவே, எப்படி இவைகளை தேகங்களில் நுழைப்பது? எந்த தேகங்களும் காணுேமே?" என்று அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்குங் காலை "நல்லகாலம்! அதோ ஜலத்தில் யாரோ கட்டைபோட்டிருக்கிறுர்கள். இவற்றைச் செல்லாக மாற்றிவிடலாம்!" என்று சிருஷ்டித்தார்களா? பூமியில் ஒரு பிணத்தைப் புதைத்து வைக்கின்ருேம். சில தினங்களில் பல்வேறு ஜந்துக்கள் உண்டாகிவிடுகின்றன. இவற்றையார் சிருஷ்டிக்கிறுர்கள்? சிருஷ்டிகர்த்தா எங்கே? தூங்கிடக்கிறது? யாரைப் புதைத்தார்கள்? எறும்புகள் கணக்குக் குறைந்துவிட்டதே! ஈக்கள் இறந்துவிட்டனவே. வேறு ஈக்கள் வேண்டுமே. மழைகாலம் நெருங்கிவிட்டது. கொசுக்கள் தயாராகவேண்டும். மூட்டுப்பூச்சிகள் இரண்டு லக்ஷம் தேவை," என்று கணக்குப் பாாத்துக்கொண்டிருக்கிறுர்? அவர் செய்யாவிட்டால் அவருடைய குமஸ்தாக்கள் செய்யலாகாதா? குமஸ்தாக்கள் செய்யும் வேலைக்குத் தானே எஜமானனுக்குப் புகழ்ச்சி எனலாம்.

(தொடரும்.)

---

பெரிய மனிதர்:—"இந்த ரயில் உண்மையில் ஜோலார்ப்பேட்டை போவதா?"

டிக்கட்கலெக்டர்:—"போவதென்றே ட்ரைவரும், கார்டும், ஸ்டேஷன் மாஸ்டரும், நானும் நினைத்துக்கொண்டிருக்கிருேம். இதற்கு அதிகமாக எனக்கொன்றும் தெரியாது."

# மாதர் உலகம்



## கௌஸல்யா மகாராணியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

(529-ம் பக்கத் தொடர்ச்சி.)

நமது மாதரசியார் கணவன் நிலையையும், மைந்தன் உறுதியையும், அரசர்க்கரசனுக்குப் பூர்வம் ஏற்பட்டதாகிய முனிசாப வரலாற்றையும் மனதிற்றெளிய வுணர்ந்த பின்பு ஊழின் தடுப்பரிய பயனை யெண்ணிப் பட்ட துயரத்தினைக் கவியரசர் ஆயிரம் ஆயிரம் நாவுகளாலும் அளவிட முடியாமை தோன்ற, ஆ! ஆ! உயர் கோசலையாம் அன்னம் என்னுற்றனளே என்று ஆற்றா துரைக்கின்றார்.

எண்ணத்தை எழுத்தில் சித்திரித்துக்காட்ட வல்லவராய கம்பநாடரே இவ்வாறுரைத்தாரெனில் அரசியார் நிலையை எவரே விளக்கவல்லார்?

மகவாசை எவ்வாசையினும் தலை சிறந்தது. அவ்வாறே மாங்கல்ய ஆசையும் மகளிர்க்குத் தலை சிறந்ததாகும். இவ்விரண்டாசைகளையும் அரசியாரிடம் ஸத்தியம் காப்பதில் எழுந்த உறுதி வென்றதென்பது இவ்விடத்தில் நன்றாக விளங்குகின்றது. என்னே பண்டைக்காலத்து இந்திய மாதர்களின் தூய்மையுள்ளத்தில் தோய்ந்து கிடந்த தியாக புத்தி. வாழ்க்கைத் துணையாக மாதரை தெய்வப் புலவர் கூறியதன் நுட்பம் இஃதேயன்றோ? பண்டை நூல்களில் காணப்படும் சரிதவரலாறுகளில் அபிப்பிராய பேதங்கள் இஞ்ஞான்று வானம் அளாவச் செழித்தோங்கி வருவதை நாம் மறக்கவில்லை. எல்லாச் சரித வரலாறுகளிலும் இவ்விடர்ப்பாடு இயல்பே. நூல் ஏற்பட்டகாலம் அக்கால மக்களின் கொள்கை இவைகளுக்கேற்ப எழுந்த நூல்களை எத்தனையெத்தனையோ மாறுபட்ட கொள்கைகளும், உணர்ச்சிகளும் வளர்ச்சியுறும் தற்கால நாகரிகர் எதிர்ப்பதும் ஆராய்ச்சித் துறையில் புதிதன்று. ஆனால் நம்பின்னால் வரும் சந்ததியர்களும் நமது தற்கால உணர்ச்சிகளை இகழ்ந்து மேற்செல்வார்கள் என்பது நிச்சயம். உலகம் என்பது நிலையில்லாதது என்னும் கருத்தினை யுள்ளடக்கிக் கொண்டிருப்பதற்கு இவ்வேறுபாடுகளே சான்றாகும். எனினும் நாம் வியந்து போற்றுவதெல்லாம் பண்டைக்

---

மனிதன் பிறந்துள்ளது உண்மையைத் தேடவே. ஆனால் அதை அடையும் பாக்கியம் வேறோர் பெரியசக்திக்கே உண்டு.

கால மாதர்களின் பதிபக்தி, அல்லது தாம்பத்தியச் சிறப்பு என்பதையே யாகும். இந்நாட்டு மாதர்கள் நாயகர் கொள்கைக்குத் துணைபுரிவதில் கொண்டிருந்த உறுதியை எவ்வாறு பாராட்டலாம்.

சமீபத்தில் அறிவிற் சிறந்த ஆங்கிலப் பெரியாராகிய லாயிட் ஜார்ஜ் என்பவர் "நகரத்திற்கே செல்வதாயினும் உரிமை வேண்டும். பிறர் ஆட்சியில் சுவர்க்கம் வருவதெனினும் சிறந்ததாகாது" எனக்கூறிய பொன்னுரைக்கிணங்க இல்வாழ்க்கையில் வேற்றுமை யெண்ணங்களால் இன்பம் எய்துவதைவிட ஒற்றுமையினால் துன்பம் வரினும் பொறுப்பது மிக மிகச் சிறந்ததென்பதே எமது துணிபாகும். இதை நிரூபிப்பதே கௌஸல்யா மகாராணியாரின் வரலாற்றின் சிறப்பாகும். இனி இக் கற்புக்கடவுளின் அறிவின் பெருமையைக் கவியரசர் குகப்படலத்தில் சிறப்புறத் தீட்டுகிறார்.

குருவாகிய வசிஷ்ட முனிவரால் பரதன் கேகய நாட்டினின்றும் அயோத்தியை யடைந்து நிகழ்ச்சிகளை யுணர்ந்து காலாக்கினி ருத்திரனைப் போல் கடுஞ்சினம் கொண்டு தனது உள்ளத் தூய்மையைப் பெரியன்னைக்குணர்த்தி ஈன்ற கொடியாளை வெறுத்துத் தனக்குத் தாயினால் விளைந்த மாற்றொணுத் துன்பத்தினையும் பழியினையும் எண்ணி எண்ணி மனமுருகி இது தீர்த்தன் முன்னோனைத் தொடர்ந்து சென்று கண்டு வணங்கி, மன்றாடிக் குறையிரந்து மனதைத் திருப்பி அழைத்து வந்து நெடுநகர்க் கரசனுக்கி முடி புனைவித்திடலே தக்கதென முடிவுசெய்து, இதனை நகரத்தாருணரப் பறைசாற்றுவித்துத் தமையன் அணிந்ததாகிய மாவுரியையும் சடை முடியையும் தானும் தாங்கிப் புறப்பட்டுச் சென்று கங்கைக் கரையினை யடைகின்றான். ஆண்டுத் தன் குல முதல்வனாகிய இராமபிரானிடம் உண்மையுயிர் நேயம் பூண்ட குகன் என்னும் வேடர் தலைவனால் முன்னர் வெறுக்கப்பட்டுப் பின்னர் தோழமை கொண்டு நகர மாந்தர்களையும் சேனைத்திரள்களையும் ஆறு கடப்பித்துத் தானும் தம்பியும் தாய்மார்களுடன் தனித்தோணியில் ஏறுகின்றான். அதுபோழ்து குகன் தனதுள்ளுறை யுயிர்நிலையாகக் கொண்ட இராமனின் தெய்வத் தாயின் திருவுருவைத் தெரிசித்தவளவில் இவர் யாவர்? எனப் பரதனை வினவுகின்றார்.

பரதனும் கைகேசி உள்ளத்தில் தைக்குமாறு புருஷபாக்கியத்திலும் புத்திர பாக்கியத்திலும் தலைமைப் பேற்றிலும் தனக்கிணை பிறரில்லாத பெரியார் என விடையளிக்கின்றான்.

இதைக் கேட்டதும் ஆற்றுப் பெருந்துயரினை அடக்க முடியாத குகன் அவனது கள்ளமறியா வுள்ளத்தியல்பிற்கேற்ப கௌஸல்யா தேவியின் திருவடிகளில் விழுந்து வாய் திறந்தாற்றுகின்றான். அதுகண்ட அன்னை மனம் கரைந்து பரதனை நோக்கி,

"என்றதுமே யடியின்மிசை நெடிது
வீழ்ந்தழுவானை யிவன் யார்?"

என்று கன்றுபிரிகாராவின் துயருடைய கொடி வினவியதாகக் கவி கூறுகின்றார். இதுவே ஈண்டு சிந்தித்து வந்திக்க வேண்டுவதாகும். என்னை?

---

நட்பு பழக்கத்தாலேயே வளரும். பழக்கத்தாலேயே நிலைபெறும்.

அரசபத்தினி தம் பாதங்களில் வீழ்ந்து புலம்பும் அவ்வனசரனை அப்பா நீ யார்? என வினவினாரில்லை. காரணம் மிக மிக நுட்பமான தொன்றும். முதலாவது அந்தப்புரவாசம் செய்யும் அரசகுல மாதர்கள் பரபுருஷர்களுடன் பேசுதல் இயற்கை விரோதம். வயதினால் மூப்படைந்தும் துன்பத்தினால் உள்ளுடைந்தும், அந்தப்புரத்தினின்று காலவன்மையினால் காடு நோக்கி மைந்தனைக் காணப்போந்த இவர் தமது உயர் குடிப்பிறப்பிற்கும் கற்பின் கடமைக்கும் உள்ளடங்கிக் குகனை நீ யாரென்று வினவாமல் தமது உண்மைப் புதல்வனாகிய பரதனை முக நோக்கி இவன் யார்? என வினவியதாகக் கொள்ளுதல் ஒரு முறை.

இஃதன்றித் தம்பால் துயர்காட்டும் நிகழ்ச்சி தமது மைந்தன் பிரிவையும் மன்னன் சாய்வையும் பற்றியதாகவேயிருக்கும் என்பது தம்முள் தெளிவேயாயினும், தாமே நேருக்கு நேராக துக்கோபசாந்தி செய்யின், இவ்விரு மகத்தான துக்கங்களும் ஒருங்கே நிகழ்வதற்குத் தான் கைகேயின் கர்ப்பத்தில் பிறந்ததே காரணமெனப் பன்முறையும் புகன்று தன்னைத்தானே வெறுத்து மனம் கவலும் குணக்குன்றாகிய அப்பரதனை அந்நியனாக்கித் தாமே குகனுடன் ஆறுதல் புகலத் தொடங்குவது பின்னும் பரதனைத் துன்புறுத்தும் குறிப்பாகும் என்னும் மதிநுட்பத்தினால் பரதனை நோக்கி வினவினார் என்று கொள்வது மற்றொரு முறை. இம்முறை முந்திய கருத்தினைவிட மிக விழுமியதாகும். கௌஸல்யா மகாராணியாரின் எத்துணை இடாிலும் பதறாத, முறைவழாத, புண்பட மொழிய விரும்பாத உயரிய பண்புகளைக் கவியரசர் தீட்டியிருக்கும் திறமைதான் என்னே!

இவ்விரண்டு மன்றி இன்னொரு பொருளும் அடங்கி நிற்கின்றது. அதாவது நாடோ தலைவனிழந்து அநாயகமாக நிற்கின்றது. பரதனோ தாய்பெற்ற வரம் தவறுதலின் அவ்வரசினை ஏற்க மறுக்கின்றான். இந்நிலையில் மக்கள் குறைபாடுகளைக் கேட்கும் கடமை எவர்பாலில் உளது? மூத்த பட்டத்தரசியாகிய கௌஸல்யா தேவியிடமே அரசியல் அமைப்பு விதிப்படி அமைந்துளதாதலினாலும், அவ்வுரிமையைத் தமதாய்ப் பாவித்துத் தாமே உசாவுதல் பரதனை அதினின்றும் தாமே விலக்கியதுமாகும். அன்றியும் அப்படிச் செய்வது சக்கரவர்த்தி கொடுத்த வரத்தின் பயனை யவமதித்ததுவுமாகும். ஆதலின் தன்னாணையை மறாமல் புதல்வன் அக்கடமையை ஏற்குமாறு செய்தல் நலமெனும் நுட்பத்தினையும் இராணியார் பின்பற்றினார் என்பதுவும் பொருந்தும். இவ்வாறு கேட்ட தனது தாய்க்கு குகன் தன் முன்னோனுடன் கொண்ட ஆழ்ந்த தூய நட்புரிமையை விளக்கிப் பரதன் சிறப்புற உணர்த்துகின்றான். உடனே போரசியார் குகனை நேரில் விளக்கி நைவீர் அலீர் மைந்தீர் இனித்துயரால் என்று மக்களில் ஒருவனாக ஏற்றமை தோன்ற விளித்து, பரதனையும் சத்துருக்கனையும் கூட்டி வருந்தாதீர்கள் மைந்தர்களே என ஆற்றுகின்றார். என்னே தேவியாரின் சொல்வன்மை அன்பின் அழகு? தன் செல்வப் புதல்வன் இராமனால் சகோதரனாகக் கொள்ளப்பட்டவன்என்ற மாத்திரத்திலேயே தானே அதில் முரணாது ஈடுபடும் பண்புதான் என்னே தாய்த்தன்மை யென்பது இதுவன்றோ? அற்பமான புதிய மாறுதல்கட்

---

நம்மை நாம் வெல்லாத வரை அறம் எதுவும் இல்லை. உழைப்பு வேண்டாத செயலெதுவும் மதித்தற் குரியதன்று.

கும் பெண்கள் உள்ளம் அஞ்சிப் பின்வாங்குவ தியல்பு. இம்மகாராணியார் அத்தகைய பேதமையுமின்றி விரிந்த அன்பும் பரந்த நோக்கமும் பிறப்பிஞலோ செல்வத்திஞலோ உயர்வு தாழ்வென்று கருதும் அறியாமையை வென்று அன்பு ஒன்றே எல்லாவற்றிற்கும் உயிர்நிலை யென்று உட்கொண்ட பெருந்தன்மை நன்கு விளங்குகின்றது.

இம்மட்டோ அலகில்லாத பல ஆயிரம் ஆண்டுகள் மகவின்றி வருந்திக் கலைக்கோட்டு முனிபுங்கவரால் புத்திர காமேஷ்டி யாகம் புரிந்து அரிதினுமரிதாக நான்கு புத்திரர்களை பெறவேண்டியிருந்தது. இராம லட்சுமணர்களாகிய ஸத்தியம் காக்கும் வீரப்புதல்வர்கள் அரச சம்பத்தைத் தியாகம் செய்ததின் மூலம் ஐந்தாவது புத்திரஞகக் குகனையும் பெற்றேன். இப்பெரிய புத்திரலாபத்திற்கு ஏற்பட்ட சிரம காரியம் பெரிதன்று. ஆகலின் வாயுரிமையோடு மட்டில் சகோதரர் என்றிராமல் மன்னனுக் குதயம் செய்த மக்கள் நால்வருடன் ஐந்தாவது புதல்வஞகக் கருத்தொன்றுபட்டு இவ்வகன்ற புவியை நீடூழிகாலம் ஆள்வீராக, என்று மைந்தன் எண்ணத்திற்கும் தமது எண்ணத்திற்கும் உள்ள அபேத நிலையை உறுதிப்படுத்துகின்ருர். மைந்தன் தன் உரிமைத் தம்பியாக மட்டில் கொண்டான். அன்னையோ, அப்படிக் கொண்டதல்லாமல் அரசுரிமையையும் பெறும்படி கூறுகின்ருர். உத்தப் பெண்களின் உள்ளத்தின் மாசற்ற அன்புக்கு ஈடுகாட்ட உலகில் வேறு சான்றுளதோ? அறிவுபெற இடமின்றி மாக்கள்போல் கட்டுண்டு கிடக்கும் சிற்சில பெண்கள் பொருட்பற்றே உயிர் நிலையெனக் கருதுகின்றனர். இந்நிலை ஆண்மக்கள் இனத்திலும் மிக மிகக் காணலாம். எனினும் பிறர்க்குதவுவதில் பொதுவாகப் பெண்கள் மனம் கொள்ளார் என்று ஆடவர் பலர் கூறுவது சர்வ சாதாரணம். கம்பர் இத்தவருகிய கருத்தினை இராணியாரின் குணநலங்களை விளக்கும் முகத்தால் வெட்டித் தள்ளுகின்ருர் என்றே மகிழ்ச்சியுறுவோமாக. பின்னர் நமது கவியரசர் இராணியாரை மீட்சிப் படலத்தில் தான் சந்திக்கின்ருர்.

குறித்த பதினன்காவது ஆண்டின் இறுதிநாள் போந்தது. நந்திக்கிராமம் எனும் புறப்பதியில் தமையஞரின் பாதுகைகளைத் தலைமேற் புனைந்து நீருறு தொழுகும் கண்களையும் நிலைபெரு துளையும் கருத்தினையும் கொண்டு மாவுரிபோல் உலர்ந்த யாக்கையுடன் தென்திசை நோக்கி நோக்கித் தேம்பிநிற்கும் பரதன் அண்ணல் தனக்களித்த வாக்குறுதிப்படி போதரவில்லையெனவே முடிவு கொண்டு தான் அவர்பால் மொழிந்த சூளின்படி அனல் மூட்டி அதில் மூழ்குவதென உறுதிகொண்டு வேண்டுவன அமைத்திட்டான்.

இதனை அயோத்திமாநகரில் அந்தப்புரத்தில் வசித்த கொஸல்யாராணியார் கேட்கின்ருர் அதனைக் கவி.

"அப்பொழுதின் இவ்வுரை சென்ற யோத்தியினில் இசைதலுமே அரியை [யீன்ற
ஒப்பெழுத வொண்ணுத கற்புடையாள் வயிறுபுடைத்தல மந்தேங்கி
இப்பொழுதே யுலகிறக்கும் யாக்கையினை முடித்தொழிந்தால் மகனே [யென்னு
வெப்பெழுதிஞலன்ன மெலிவுடையாள் கடிதோடி விரைந்து வந்தாள்"

என்று கூறுகின்ருர். என்னே கொடுந்துயர்! இராமன் வனம் புகுந்த காலை

யில் இவ்வன்னையார் தொடர்ந்து புறம் போந்து கதறினாரில்லை. பின்னர் பஞ்சவடியில் பெறலரும்புதல்வனைப்பிரிந்து நகர் வரவும் மூரண்பட்டாரில்லை. சக்கரவர்த்தி விண்ணுடாளச் சென்ற பின்னரும் தானும் மைந்தனுடன் வனத்தில் வாழ்வேன் என வற்புறுத்தி யிருக்கலாம். அவ்வாறு செய்யின் நீதிக்கோர் நிலையமாகிய பரதன் உயிர் வாழத்துணியான் என்றஞ்சியே அத் தெய்வத்தாய் அயோத்தி போந்து இன்பிலா வாழ்நாள் கழித்தனர் போலும். இவ்வணங்கு எம் மைந்தன் பொருட்டு கடலனைய கவலையை உள்ளத்தி லடக்கிப் புவியனைய பொறைதாங்கி இதுகாறும் உயிர் சுமந்தனரோ அம்மாண்புறு புதல்வன் இன்று தீக்குளிக்கத் துணிவு கூர்ந்தான் எனக் கேட்டதும், தமது பதவி, தகுதி, முறைமை எல்லாவற்றையும் மறந்து இருகரங்களினாலும் வயிறு புடைத்து வாய்விட்டாற்றி மகனே நீ சரீரத்தை அனல்வாய்ப் படுத்தினால் இவ்வுலகிலுள்ள எல்லாவுயிரும் மாண்டுபடும். உன்னை யிழந்து உலகம் உய்யாது உய்யாது எனக் கதறித் தமது பெண்மை, முதுமை யிரண்டிற்கும் ஒவ்வாதபடி நடந்து வராமல் எரியமைத்த மயானத்தை யடைய விரைந்தோடி வந்தார்'' என்று கவி எடுத்துக் காட்டுகிறார். பன்னிரண்டு திங்கள் சுமந்து பெற்ற ஆடவரும் பெண்மையை யவாவும் தோளினனாகிய திருமகனை நாடிறக்கும்படி அரசர் கட்டளை யெனக் கூறக் கேட்டபோது "தன் மகன்வைகும் ஆலிலையன்ன வயிற்றினைப் பெய்தளிர்க் கையினாற் பிசையும்" எனத் துன்பதைச் சகித்து அடக்க முயன்ற பான்மையில் வருணித்த கவியரசர் பரதன நிலை கேட்டவுடன் வயிறுபுடைத்தல மந்தேங்கி எனக் கூறியதன் பேதத்தை நுண்ணறிவுடையோர் நோக்குவாராயின் இராம பரதாகட்குள் தர்க்க விலக்கணப்படி பரதனது நடையே சிறந்த தென்பது புலனாகும். இல்லையென்று சக்கரவர்த்தியினால் மறுக்கப்பட்ட அரசுரிமையையும் வரம்பில் போகத்தையும் கவலாது துறந்தேகினான் இராமன். தன்னை நாடிவந்த அந்த அரசுரிமைச் செல்வத்தினை நீதிக்கு ஒவ்வாததெனக்கண்டு உதைத்துத் தள்ளினான் பரதன். தந்தை தவறாய விதியியற்றினும் தாழ்மையுடன் ஏற்க விழைந்தான் இராமன். பிரகலாதனைப்போல் தந்தை சொல்லி யிருந்தாலும் குரவன் கூறி யிருந்தாலும் தன்னைப் படைத்த கடவுளே கட்டளை வழங்கி யிருந்தாலும் தன்மனதிற்கு அநீதி யெனப்பட்ட முறையை ஏற்க மனமொழி மெய்களாலும் மறுத்த உத்தம ஸத்தியாக்கிரகி பரதன்.

இது குறிப்பிற்கொண்டே குகன் ஆற்றைக் கடக்கையில் "ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ தெரியினம்மா" என்றும், "நும்மரபினோர் புகழ்கள் எல்லாம் உன் புகழாக்கிக்கொண்டாய்" எனவும் மனம் திறந்து கூறினான் எனில் பிறசான்றும் வேண்டுமோ? குகன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது இராம பக்தி. பரதனைக் கண்டபிறகு பரதபக்தியே தலைசிறந்த தாயிற்று.

இந்த கௌஸல்யா தேவியாரே முதற்கண் இராமனிடம் "உன்னைவிடப் பரதன் மும்மையின் நிறைகுணத்தவன்" எனப் புகன்றதும் இத்தகைச் சிறப்பு வாய்ந்த-நீதிக்கு உயிர் நிலையாகிய பரதன் தீக்குளிப்பான் எனக் கேட்ட

---

பெண்ணே ! சுகமான காலத்தில் நிச்சய புத்தியில்லாய். நாணமுடையாய். களிப்படையச் செய்வதும் கஷ்டம். துன்பமும் கவலையும் மார்படைக்கும் காலத்தில் அவை துடைக்கும் தெய்வமாவாய்.

போது பேரறிவுடையதாய ஆறாறு கடிதோடி வந்தார் என்பதில் யாது வியப்பு? கூட மைந்தா, நீயுயிர்விடில் என்று உரையாமல் நீ யாக்கையினை ஒழித்தால் என்று கூறும் நுட்பம் கௌஸல்யா தேவியாரின் (ஆன்மா அழிவற்றதென்றும், சரீரமே அழியக் கூடியதென்றும் அறிஞர்கண்ட) ஆன்ம போதத்தின் தெளிவும் தெற்றென படிப்போர்க்கு எடுத்துக்காட்டுகின்றது. சக்கரவர்த்தி பிரிவினாலும் இராமன் பிரிவினாலும் இறவாத உலகம் நீ பிரிந்தால் இறக்கும் என்று கூறுகின்றார். நீதி யழிந்தால் உலகெவ்வாறு நிலைநிற்கும் என்பதே இதன் உள்ளுறை.

"மந்திரியர் தந்திரியர் வளநகரத்தவர் மறையோர் மற்றும் சுற்றச்
சுந்தரியர் எனைப்பலரும் கைதலையிற் பெய்திரங்கித் தொடர்ந்து செல்ல
இந்திரனே முதலாய இமையவரும்முனி வரரும் இறைஞ்சி யேத்த
அந்தரமங்கையர் வணங்க அழுதரற்றிப் பரதனை வந்தடைந்தார் அன்றே"

எனக் கவி அங்குள்ள நிலையை எழுத்தோவியமாக வரைகின்றார். பின்னர்

"எரியமைக்கு மயானத்தை யெய்துகின்ற காதலனை இடையேவந்து
விரியமைத்த நெடுவேணி புறத்தசைந்து வீழ்ந்தசைய மேனிதள்ளச்
சொரியமைப்ப தரிதாய மழைக்கண்ணாள் தொடருதலும் துணுக்கம் [எய்தாப்
பரிவமைத்த திருமனத்தான் அடிதொழுதான் அவள் புகுந்து பற்றிக் [கொண்டாள்"

என்பதனால் தன்னால் தன்தாய்க்கு நேர்ந்தது யாம் கண்டபோது பரதன் உள்ளந்திடுக்கிட்டான் என வறிகிறோம். என், இவர்க்கு யாது விடை பகர்வது எவ்வாறு ஆற்றுவ தென்றே துணுக்கத்திற்குக் காரணமாகலாம். கண்டதும் திருவடிகளில் வீழ்ந்து பரதன் வணங்குகின்றான். தாயாகிய கவுசலை கெட்டியாகப் பணிந்த மைந்தனைப் பற்றிக்கொண்டு கல்லும் கரையும்படி சில உரைகள் கூறுகின்றார்.

"மன்இழைத்தது மைந்தன் இழைத்ததும்
முன்னிழைத்த விதியின் முயற்சியால்
பின்னிழைத்ததும் எண்ணில் அப்பெற்றியால்
என்னிழைத்தனை என்மகனே என்றார்"

கண்டு கைகேயி மகனன்று என்மகன் என வலியுறுத்துவது குறிப்பிடத்தக்கது.

நீயிது எண்ணினையேல் நெடுநாடெரி
பாயுமன்னரும் சேனையும் பாயுமால்
தாயர் எம்மனவன்று தனியறம்
தீயின் வீழும் உலகுந்திரியுமால்

---

நான் இயற்கையையும் சபிப்பதில்லை மரணத்தையும் சபிப்பதில்லை. ஏனெனில் நெறிபிறழ்ந்த தெதுவும் நிலையாது.

நகரமாந்தர் சேனைசமூகம் உள்பட தாய்மார்களாகிய எங்களோடு இவ் வழிவு முடிவுறாது. ஐயனே தனி அறம் தீயின்விழும் என்கின்றார். இஃதன்றோ சிறப்பு! தோன்றிய உயிர்க்குலம் அனைத்தும் மடிந்தொழிவதும் பெரிதல்ல. அறக்கடவுள் அன்ன நீயே அறத்தை எரியில் வீழ்த்தலாகுமோ என உசாவுகின்றார். பின்னரும் தொடர்ந்து,

தருமநீதியின் தற்பயனாவது
கருமமேயன்றிக் கண்டிலம் கண்களால்
அருமை யொன்றும் உணர்ந்திலை யையநின்
பெருமை யூழிதிரியினும் பேருமோ.

எனவும்,

"எண்ணில்கோடி யிராமர்கள் எண்ணினும்
அண்ணல் நின்னருளுக் கருகாவரோ
புண்ணியம் எனும் நின்னுயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ"

எனவும் பரதனது அருமையையும் பெருமையையும் உணர்த்துகின்றார்.

குகன் ஆயிரம் இராமர் நின்கேள் ஆவரோ?

எனப் புகன்றான். நமது தேவியாராகிய இராமனை யீன்ற அன்னையார் கோடி யிராமர் கூடினும் நினது அருட்பெருங்குணத்திற்கு இணையாகார் எனப் பெருக்கிக் கூறுகின்றார். உதவாக்கரையான புதல்வனைப் பெற்றதாயும் தன் மகவே சிறந்ததெனக் கருதுதல் உலகியல்பு. உத்தமகுணத்திற் சிறந்த இராமனையே பெற்றெடுத்த இத்தவத்தாயோ, மாற்றாள் மைந்தனாகிய பரதனைக் கோடிபங்கு சிறந்தவனாக மதிக்கின்றார். இத்தகைய நியாயபுத்தியுடைய சக்கிரவர்த்தினியின் குணச்சிறப்பை பொன்னுரைகளால் தான் புகழ முடியுமோ, பெண்மைத் தெய்வம் என்பது ஓர் சிறப்போ, தெய்வங்களிடனித்தும் இதற் கிணையான குணம் இருக்குமோ, என்பதும் ஐயமே. இடையில் புண்ணியம் எனும் நின்னுயிர் போயினால் மண்ணும் வானும் உயிர்களும் வீயுமால் என்றும் சுட்டிக்காட்டுகின்றார்.

புண்ணியம் என்னும் புனிதப்பொருள் இறந்தால் பின்னர் மூவுலகங்கள் தானும் ஏது? உலகுயிர்கள் தான் உவ்வாறு நிலைபெறும்? என்பதில் எத்துணையோ விரிவான பொருள்கள் செறிந்து கிடக்கின்றன. விரிக்கில் பெருகும். இவ்வளவையும் கூறியபின் இவ்வனைத்தையும் நீ ஏற்காவிடினும் இன்றொரு பொழுதுதாமதி. உன் முன் பிறந்த இராமன் ஒருபோதும் சொல் தவறான். நாளையாவது தவறாமல் வந்து சேருவான். என்று தடுத்துரைக்கின்றார். பின்னர் பரதன் விடையும் அவனது தடுக்கொணா உறுதியும், அநுமான் வரவும் துன்பமனைத்தும் தீயில் குளிக்க இன்பம் தளிர்த்ததும் வாசகர்கள் அறிந்ததேயாகும். எடுத்துக்கொண்ட மாதரசியாரின் பெருமையை முற்றும் அளந்து காட்டும் வன்மை இன்மையால் இம்மட்டோடு இதனை முடிக்கின்றேன்.

---

உண்மையாளர்க்கு உதவியின் மதிப்பு உதவுவார் மதிப்பு அளவேயாகும்.




# ஸ்ரீ வேமன சுவாமிகள் பாடல்



(543-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

திருத்தம்:—சென்ற மாத விதழில் வெளிவந்த பாடல்களில், 9-வது பாட்டில், 4-வது வரியிலுள்ள, 'யாவார்' என்பதை 'யாவர்' எனவும், பாடல் 13, வரி 2-ல், 'தெரியுமே' என்பதை 'திரியுமே' எனவும், பாடல் 17, வரி 2-ல் 'ஓதவரி' என்பதை ஓதவறி' எனவும், பாடல் 18, வரி 3-ல், ''காரணம்தாமே' என்பதை 'காரணமதாமே' எனவும், பாடல் 22, வரி 1-ல் 'பதிக்கலம்' என்பதை 'பதிக்காம்' எனவும் திருத்திக்கொள்க.

(26) பன்றியீ னுங்குருளை பாரீரைந் தோரைந்தே
அன்றியா னையீனு மாராயி—னென்றன்றோ
உத்தமச் சேய னொருவனே சாலானோ
இத் தரையி லார்க்கும்வே மா.

(அ-ரை) குருளை=பன்றிக்குட்டி, சேயன்=மகன், சாலானோ=போத மாட்டானோ.

(க-து) பன்றி பதினைந்து குட்டிகள் போட்டாலும் பயன் யாது? யானைக் கன்று ஒன்று போதாதோ? நற்குணமில்லாத பல பிள்ளைகளைப் பெறுவதினும் உத்தம புத்திரன் ஒருவனைப் பெறுதல் சிறப்பன்றோ?

(27) பரமபத மேகோரும் பக்தனே யென்றும்
அரயன்றான் கோரு மமரில்—பெருவெற்றி
மூர்க்கனென் றுங்கோரும் வேசையர் சேர்க்கையே
பார்க்குளபி ராமவே மா.

(க-து) பகவத் பக்தன் எப்பொழும் பரம பதத்தையே கோரி நிற்பான். அரசனோ யுத்தத்தில் வெற்றியே கோரி நிற்பான். மூடனோ துர்த்தைகளின் கூட்டுறவையே கோரி நிற்பான்.

(28) அவனவ னுகா னவனு ளொளிரு
மவனவ னுகா னவனவன் மெய்யோர்ந்
தவனவற் கூட்டு மவனே பிரஹ்ம
மவனியி லாவன்வே மா.

(க-து) (நான் மனிதன் என்னும் போதமுள்ள வரையிலும்) மனிதன் ஈசுவர னுகமாட்டான். அந்த மனிதனுக் குள்ளிருக்கும் ஆத்மாவே ஈசுவரன். ஆதலால் மனிதன் ஈசுவரனென் றெண்ணவேண்டாம். உண்மையறிந்து ஆன்மாவைப் பரமான்மாவி னிடத்தில் ஐக்கியப் படுத்துவோனே பிரஹ்ம மெனப் படுவான்.

(29) மாதொருத்தி வேதாவின் வாய்மே லுதைத்திட்டாள்
மாதொருத்தி விண்டுவின் மார்மே லுதைத்திட்டாள்
மாதொருத்தி மாசிவனைப் பாதியுட லாக்கினுள்
ஓதலென்பி றர்க்குவே மா.

(அ-ரை) வேதா=பிரமன், விண்டு=திருமால்.

(க-து) ஒருமாது (சரஸ்வதி) பிரமனை வாய்மே லுதைத்தாள், (வாயில் வசிக்கிறுள்.) ஒருமாது (இலக்குமி) திருமாலை மார்மே லுதைத்தாள், (மார்பில் வசிக்கிறுள்.) ஒருமாது (பார்வதி) சிவனை பாதி சரீர முடையவனுக்கினுள், (தான் பாதியுடலைப் பங்கிட்டுக் கொண்டாள்.) இவ்வாறு திரிமூர்த்திகளே அரிவைய ராசையிற் சிக்கி அவமான மடைந்தன ரென்னின் சாமானியர்க ளின் நிலைமையைச் சொல்லவும் வேண்டுமோ?

(30) பறையனென் போனையேன் பாரிற் பழித்தல்
சிறையுடலஞ் சோரிதசை செப்பில்—முறையொன்றே
அப்பறையற் குள்ளா ரவன்றன் குலமென்னே
தப்பிலா தோதுவே மா.

(அ-ரை) பார்=பூமி, சோரி=இரத்தம், தசை=மாமிசம்.

(க-து) இவ்வுலகத்தில் பலர் பறையரென்று ஒரு சாராரைப் பெயரிட்டுப் பழிக்கின்றார்கள். அவ்வாறு பழிப்பது ஏன்? சிறைபோன்ற சரீரத்திலுள்ள இரத்தம் மாமிசம் முதலியவை யாவர்க்கும் ஒன்றாகவே இருப்பதன்றி ஒன்றற் கொன்று பேதமின்றே. நிற்க, பறைய னெனப்படுவோனுக்குள்ளே யொருவ னிருக்கின்ற னல்லவா? அவன் குலமென்ன? ஆராய்ந்து பார்.

(31) விட்டிற்கு ளேமறைப்பு வீக்குசே லைமறைப்பு
மேட்டிமை யாய்மறைப்பு மெய்குக்கி யின்மறைப்பு
எண்ணித்த னைமறைப்பு மீசன் மறைப்படா!
மண்ணிலபி ராமவே மா.

(அ-ரை) வீக்கு=கட்டு, யாய்=தாய், குக்கி=வயிறு.

(க-து) உலகத்தில் எல்லாம் மறைப்புகளே நிறைந்திருக்கின்றன. வீட்டின் வியவகார முழுதும் மறைப்பு. அவயவ முழுதும் ஆடைகளால் மறைப்பு. தாயின் கர்ப்பம் மறைப்பு. வயிறு மறைப்பு. இத்தனை மறைப்புகளை யுடையவனுக மனிதனிருக்கையில் பரமாத்மா மறைப்பென்பதி லென்ன அதிசய மிருக்கிறது?

(32) திருமகள் வாழிலங்கைச் செல்வன் பதியைச்
சிறுவான ரக்குழுமேல் சென்று—திறலழித்த
காலமனு கூலமே லற்பர் கனம்பெறுவர்
ஞாலவி யல்புவே மா.

(அ-ரை) திருமகள்=இலக்குமி, குழு=கூட்டங்கள், திறல்=போர், வலி.

(க-து) லக்ஷ்மி வாசஸ்தானமாயி ருந்த இலங்கேசனுடைய நகரத்தைச் சிறிய வானரக்கூட்டங்கள் சென்று முற்காலத்தில் தம் வலிமையால் அழித்து விட்டனவே. இதனுல் அறியக்கிடப்ப தென்னவென்றால், காலம் அனுகூலமா யிருக்குமாயின் அற்பரும் மேன்மை பெற்று விடுவர். வலியோரும் மெலியோ ராவர் என்பதே.

(33) மாதரைக் கண்டாலு மாதனங் கண்டாலு
மோதுசுவை யுண்பொருளைக் கண்டாலுந்—தீதகற்று
மாசாரி யர்க்கேனு மாசைதோன் றுதுகொலோ
மாசிலபி ராமவே மா.

(க-து) குருக்கள் ஆசாரியர்கள் சன்னியாசிகள் என்று சொல்லிக் கொள்ளு கின்றவர்களுக்கும் பண ஆசை விடுவதில்லை. மாதரைக் கண்டாலும், சிறந்த செல்வத்தைக் கண்டாலும், உருசியுள்ள பதார்த்தங்களைக் கண்டாலும் ஆசாரியர்களுக்கு மாசை யுண்டாகா திருக்குமோ?

(34) நீரிற் பலகாத நீந்தித் திரிமீனம்
பாரி லொருமுழமும் பாறுமோ—தேரினிது
தன்பலம தாகுமோ தானபல மல்லவோ
வன்புவியு லாகும்வே மா.

(அ-ரை) பாறும்=ஓடும்.

(க-து) மீன் நீரில் பல காததூரம் செல்ல வேண்டுமாயினும் எளிதிற் செல்லும். ஆனல் பூமியில் ஒருமுழ தூரமும் செல்லாது. ஆகவே, ஒருவர்க்குச் செல்வாக்கும் வல்லமையும் இடத்தை யனுசரித் துண்டாகுமேயன்றி சொந்த பலத்தினலல்ல. "தன் ஊரில் யானை அயலூரில் பூனை" யல்லவா?

---

அழகு அறம் அறிவு மூன்றும் சகோதரிகள். ஒருவர்க்கொருவர் உழுவலன்புடையார், மனிதர்க்கு உற்றதோழர். ஒருங்கு கூடியே வாழ்வர். விழி நீர் பெருக்காது வேறு பிரித்தல் இயலாது.

(35) அறிவுடைய ரேபெரிய ராவரா லன்றி
அறிவிலா ராகார் வயதினுல் வாசுதே
வன்பெரிய னன்றி வசுதேவ னுவானே
மண்புகழான் சாற்றுவே மா.

(க-து) அறிவினுல் பெரியோரா யிருப்போரே யாவராலும் கௌரவிக்கப் படுவரே யல்லாமல், அறிவிற் சிறியராயும் வயதிற் பெரியராயு மிருப்போர் கௌரவிக்கப்பட மாட்டார். வசுதேவன் வயதிற் பெரியவனுயினும் அவனை ஒருவரும் வணங்குவதில்லை. அவன் மகனுகிய வாசுதேவன் (கிருஷ்ணன்) யாவராலும் பூசிக்கப்படுகிறு னல்லவா?

(36) தத்துவங்க ளேபேசித் தர்க்கமிடு வோர்பலரால்
தத்துவத்தி லேநிற்போர் தாமரியர்—தத்துவமோர்
பீடுடையார் வைகினும் பெட்புடன்காண் டற்கரியர்
நேடிடினு மெங்கும்வே மா.

(க-து) உலகத்தில் தத்துவவாத மிட்டுத் தர்க்கித்துத் திரிவோர் பலர் கிடைப்பர். ஆனல், அத்தத்துவநெறி நிற்போர் மிக வரியர். இருந்தாலும் அவர்கள் புலப்படுவதில்லை.

(37) சலத்தின்மீ னைநம்பித் தன்வாய்த் தசையைச்
சலமுறவே போகட்டுச் சம்பு—நலமிழக்க
விண்பருந்து வேகமாய் மேவிக்கொண் டேகியதே
மண்ணிலிதை யாய்திவே மா.

(அ-ரை) சலம்=உறுதியின்மை. சம்பு=நரி.

(க-து) மாமிசத்துண்டை வாயிற்பற்றிய வண்ணம் ஆற்றங்கரையை யடைந்த நரியொன்று தண்ணீரிற் போய்க் கொண்டிருந்த மீனைப் பிடிக்கச் செல்ல அம்மாமிசத்துண்டு கீழே விழ அதனை ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டே பருந்து விரைவாக வந்து தூக்கிச் சென்றது.

சம்புவே யென்னபுத்தி சலந்தனில் மீனைநம்பி
வம்புறு வடத்தைப்போட்டு வானத்தைப் பார்ப்பதேனே.

என்னுஞ் செய்யுளோ டிதனை ஒப்பிட்டு நோக்குக.

(38) மாதாவின் கர்ப்பத்தில் மாம்சபிண்ட மாயிருந்து
பூதவினை யெண்ணிப் புலம்பியே—பேதுற்றுப்
பூதலத் துற்றளவில் பொச்சாந்து மோகியாம்
காதலா லென்றும்வே மா.

(அ-ரை) பூதம்=இறந்தகாலம். பொச்சாந்து=மறந்து.

(க-து) மனிதன் மாதாவின் வயிற்றில் மாமிசபிண்டமாக விருந்த காலத்தில் தன் முன்னை வினையை எண்ணி யெண்ணி வருந்தி, இனி, வினைகளைச் செய்யாது கடவுள் திருவடியை யடைய முயல்வேன் என்று கருதுவான்.

ஆனால் பூமியில் பிறந்தவுடன் அர்ங்னைவை மறந்து மேலும் ஆசைக் கடலு ளாழ்ந்து பிறவிக்கே வழி தேடுகிறான்.

உற்றி டெங்கருப் பாசயப் பையுறுத் துதல்முற்
சொற்றி டுந்துய ரழுந்திமுன் னிகழ்ச்சியுந் தோன்றப்
பற்றி டும்புவிப் பிறந்துநன் னெறிநின்று பவநீர்
வற்றி டச்செய்வா மென்றுள்ளிப் பிறக்கும்பின் மறக்கும்.

என்னும் குசேலோபாக்கியானச் செய்யுளோடிதனை ஒப்பிடுக.

(39) வேம்பின்றோல் தின்றால் விடரோகம் போகுமே
ஆம்படிவந் தேசுதிட னாகுமால்—சோம்பின்றித்
தின்னத்தின் னத்தானும் தேக்கினிமை யாகுமே
மன்னவபி ராமவே மா.

(க-து) வேம்பு மிகவும் கசப்புடையதாயினும் அதனைப் பொருட் படுத்தாது வேம்பின்பட்டையை இடைவிடாமல் தின்றால் சரீரத்திலுள்ள விஷ நோய்களெல்லாம் நீங்கும். தேகத்தில் தேசுண்டாவதோடு சரீரதிடனு முண்டாகும். விடாமல் தின்னத்தின்ன கைப்பு நீங்கி இனிமையாகவு மிருக்கும். அதுபோல, கஷ்டமான காரியமென்று விட்டுவிடாமல் செய்துவரின் சுலபமும் நன்மையுமாகும். அப்படியே பிரஹ்மோபாசனையும் முதலில் சிரமமாகத் தோன்றினும் இடைவிடாது அப்பியசித்து வந்தால் எளிதாகும்.

(40) நீரிலே மூழ்குவோன் நிர்மலான் மாவாகான்
பூரணமா முத்தி பொருந்தானால்—ஆராயின்
நீர்க்கோழி யெப்போதும் நீரிலே மூழ்காதோ
மார்க்கமீ தன்றுவே மா.

(க-து) ஒருவன் புண்ணிய நதிகள் எனப்படும் கங்கை முதலியவற்றின் நீரிலே மூழ்குவதனால் பரிசுத்தனாக மாட்டான். முத்தியை யடையான். ஆராயுமிடத்து நீர்க்கோழி எப்பொழுதும் நீரில் மூழ்கிக் கொண்டிருக்காதோ! அதனால் அது பரிசுத்தத் தன்மையையும் முத்தியையும் அடைவதாமோ.

(41) தன்னை யறிந்தானேல் தானே பிரமமாந்
தன்னுடலு ளேமுத்தி தானிறைந்—தென்றுமுள
தன்னையறி யான்பிரமந் தானவ தெப்படியோ
மன்னவபி ராமவே மா.

(க-து) ஒருவன் தனதெதார்த்த சொரூபத்தை யறிவானாயின் அவன் பிரஹ்மசொரூபியே யாகிறான். தன்னை யறியாதவன் பிரஹ்மசொரூபனாவது முடியாது. முத்தியானது வெளியில் ஓரிடத்திலிருப்ப தல்ல. எப்பொழுதும் தனக்குள்ளேதானே நிறைந்திருக்கின்றது.

---

நண்ணறிவு அன்புடன் சேர்ந்து விட்டால் அதனால் அடைய முடியாதது எதுவும் அவனியில் கிடையாது.

(42) தானந்தா வென்றிரப்போன் தாரணியிற் கீழ்மகனும்
தானந்தா வென்றிரவான் றூன்தேவன்——மானுவனே
தானந்தா னீயாதான் தன்னியனு கானரோ
ஞானவபி ராமவே மா.

(க-து) எவன் பிறரிடஞ் சென்று தானந்தா வெனக் கேட்கின்றானோ அவன் நீசனாவான். அவ்வா றிரவாமல் ஜீவிப்போன் தேவனுக்குச் சமான மாவான். தானமீயாதவன் எப்போதும் கடைத்தேறமாட்டான்; அவன் தன்னியனுமாகான்.

(43) தானங் களிலன்ன தானமே மேலாகும்
கானங் களிற்சாம கானமே லாமே
தியானத்தி லேசிவத்தி யானமே மேலாம்
தயாளவபி ராமவே மா.

(க-து) தானங்களில் அன்னதானமே சிறந்தது. கானங்களில் சாம கானமே சிறந்தது. தியானங்களில் சிவத்தியானமே சிறந்தது.

(44) உதயத்திற் சூத்திரனே யுத்தமனு மாறென்
சதிசூத்தி ரத்தன்மை சத்தியமே யன்றோசொல்
தாய்சூத்தி ரச்சியாந் தானெங்ஙன் பார்ப்பனன்
மாயமே யாகும்வே மா.

(க-து) பிராஹ்மணன் எல்லாரினும் உயர்குலத்தா னென்பர். அவன் பிறப்பில் சூத்திரனே யாகிறான். (உபநயனத்திற்குமுன் சூத்திரனேயாவான்) பிறப்பில் சூத்திரனு யிருப்பவன் எவ்வாறு உத்தமனுவான். அவன் தாய்க்கு (பிராஹ்மண ஸ்திரீக்கு) உபநயன மின்மையால் அவள் சூத்திர ஸ்திரீ யென் பதில் தடையென்ன? சூத்திர ஸ்திரீக்குப் பிறந்தவன் எவ்வாறு பிராஹ்மண னுவான். இவ்வாறு கூறுவதனைத்தும் உலகினரை யேமாற்றும் மாய வார்த்தை களேயாகும்.




# மொழிநூற் புலவரும் முதுமொழியும்

(ரா. பி. சேதுப் பிள்ளை,, பி. ஏ. பி. எல்.)

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பல ஐரோப்பிய அறிஞர் தமிழ் மொழியின் பல துறைகளையும் ஆராய்ந்து அறியத் தலைப்பட்டார்கள். மொழி நூல் முறையில் (Philology) தமிழ் மொழியை ஆராய்ந்து அதன் தனிப் பெருமையை உணர்த்தினார் சிலர். தமிழகத்தில் முற்காலத்தில் வழங்கிய வட்டெழுத்தின் வரலாற்றையும் பிற்காலத் தமிழ் எழுத்தின் வரலாற்றையும் ஆராய்ந்து தமிழின் தொன்மையை விளக்கினார் சிலர். ஆழ நெடுந்திரை ஆழிவாய்ப்பட்ட பழந்தமிழ் நாட்டின் பரப்பையும் சிறப்பையும் ஆராய்ந்து அறிவித்தார் சிலர். கல்லிலும் செம்பிலும் அமைந்த சாசனங்களைக் கற்றும், மண்ணுள் மூழ்கி மறைந்த பழம்பொருள்களை அகழ்ந்தெடுத்தும் தமிழகத்தின் பழைய வரலாற்றை அறியமுயன்றார் சிலர். தமிழ் மொழியிலமைந்த விழுமிய அறநூல்களை மேலை நாட்டு மொழிகளில் மொழிபெயர்த் தமைத்தார் சிலர்.

இவ்வறிஞர் வரலாற்றை அறிவதன் முன்னமே, அக்காலத்தில் தமிழ் இருந்த நிலையினை அறிந்து கொள்ளுதல் அவசியமாகும். தொன்று தொட்டு இந்நாட்டில் வழங்கிவரும் தமிழ் மொழியை ஆதிசிவன் தோற்றுவித்தான் என்று ஆன்றோர் கூறி மகிழ்ந்தார்கள். முத்தமிழ் முனிவராய அகத்தியர், இறைவன் அருள்பெற்று மூன்று கவடாய் முளைத்தெழுந்த முதுமொழிக்கோர் விரிந்த இலக்கணம் அருளிப் போந்தார். அம்முனிவரது நன் மாணவராகக் கருதப்படும் தொல்காப்பியனார், தொல்காப்பியம் என்னும் பெயரால் ஓர் சிறந்த இலக்கணம் செய்தருளினார். அகத்தியமும் தொல்காப்பியமும் தமிழ் மொழியில் எழுந்த காலத்து, ஆரிய மொழி பெரும்பாலும் பாரத நாட்டின் வடபால் அமைந்த நிலங்களிற் பரவி நின்றது. வடநாட்டில் வழங்கிய மொழியை வடமொழி யென்றும் தென் நாட்டில் வழங்கிய மொழியைத் தென்மொழி யென்றும், அழைத்தார்கள். வட மொழியையும் தென் மொழியையும் அக்காலத்து அறிஞர் இருவேறு தனிமொழிகளாகக் கருதினார்கள் என்பதில் ஐயமில்லை. தென்மொழி போலவே வடமொழியும் தொன்மை சான்ற

---

நட்புண்டாக அன்பு மட்டும் போதாது. இலட்சிய ஒற்றுமையும் அவசியம்.

மொழியென்றும், செம்மைசான்ற மொழி யென்றும் கருதுவாராயினர். வடமொழியைப் பாணினி முனிவற்கு வகுத்தருளிய இறைவனே, தென் மொழியைக் குறுமுனிக்கு அறிவுறுத்தார் என்று கூறியமைந்தார்கள். தமிழ்மொழியில் ஒப்புயர்வற்ற நூலாய் விளங்கும் திருக்குறளைத் தமிழ் மறையென்றும், பொது மறையென்றும் போற்றினார்கள். இப்பொது மறையைப் புகழப் போந்த புலவரொருவர்,

> " ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின் இது
> சீரி தெனவொன்றைச் செப்பரித்தால்—ஆரியம்
> வேதமுடைத்து தமிழ்திரு வள்ளுவனார்
> ஓதுகுறட்பா உடைத்து."

என்று புகழ்ந் துரைத்துப் போந்தார். செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே என்று மற்றொரு புலவர் புகழ்ந்துரைத்தார். ஆகவே இருமொழியும் நிகர் என்னும் கொள்கையே சங்கத்துச் சான்றோர் கொள்கை என்பது இன்னோரன்ன மொழிகளால் இனிது விளங்கும். தமிழ் நாட்டிற் பரவிய சாக்கிய மதத்தையும் சமண மதத்தையும் வேரறுத்து மீண்டும் சிவநெறி பரப்பத் தோன்றிய சைவச் சான்றோரும், வைணவ நெறியை நிலை நிறுத்திய ஆழ்வார்களும், ஆரியத்தையும் அருந்தமிழையும் வேற்றுமையின்றிப் போற்றுவாராயினர். பண்ணார்ந்த பைந்தமிழிற் பாமாலை பாடிய இப்பெரியார், "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" என்று இறைவனைப் போற்றும் முறையே இதற்குப் போதிய சான்றாகும்.

இருமொழியையும் நிகரென்று கருதிய இப்பெரியார் காலத்திற்குப் பின், வடமொழி தெய்வமொழியென்னும் கருத்து மெல்ல மெல்லத் தமிழ் நாட்டில் நுழைவதாயிற்று வடமொழியில் அமைந்த இதிகாசங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டன. வான்மீக முனிவர் வடமொழியில் எழுதிய ஆதி காவியத்தைத் தமிழ் மொழியில் அமைக்கப் போந்த கல்வியிற் பெரிய கம்பர், "தேவபாடையின் இக்கதை செய்தவர்" என்று முதனூல் செய்த முனிவரைப் புகழ்ந்துரைத்தார். வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி யென்பான் தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான் என்று வடமொழிக் கவிஞரை வாயாரப் புகழ்ந்துரைத்தார். வடமொழி தேவர் மொழியாதலால் விழுமிய மொழியென்றும், தமிழ்மொழி மக்கள் மொழியாதலால் தாழ்ந்த மொழியென்றும் கருதும் முறை மெல்ல மெல்ல எழுந்தது. வடமொழியிலமைந்த புராண நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கப் புகுந்தார் சிலர். வட நூல் முடிபுகளுக்கிணங்க வலிந்தும் நலிந்தும் தமிழ் நூல்களுக்கு உரை செய்யத் தலைப்பட்டார் சிலர். நன்னூல் செய்த பவணந்தியாரும், சின்னூல் செய்த குணவீரனாரும், வீரசோழிய மியற்றிய புத்தமித்திரனாரும் வடநூல் இலக்கணப் போக்கைத் தழுவி எழுதுவாராயினர். தமிழ் நாட்டிலமைந்த ஊர்ப் பெயர், மலைப் பெயர்களையும் வடமொழியிற் பெயர்த்து வழங்கத் தலைப்பட்டார் பலர். இவ்வாறாக வடமொழி உயர்ந்ததென்றும் தமிழ் மொழி தாழ்ந்த

---

பெரியார் பேச்சு அறிவு தரும். பெரியோர் மௌனம் அன்பு பெருக்கும்.

தென்றும் கற்றாரும் கல்லாரும் கருதினமையால், தமிழ் என்னும் சொல்லே வட மொழியின் சிதைவென்னும் கொள்கை தமிழ் நாட்டிற் பரவுவதாயிற்று. திராவிடம் என்னும் வடசொல்லே திராமிடம், திராமிளம், திரமிளம், தமிளம் தமிழ் ஆயிற்றென்று இலக்கண நூலோர் எடுத்துரைப்பாராயினர். தமிழ் இலக்கணம் வடமொழி இலக்கணத்தைத் தழுவி எழுந்ததே என்று பிரயோக விவேகம் கூறுவதாயிற்று. தமிழ் தனிமொழி யன்று என்றும், வடமொழி யே தமிழுக்குத் தாய்மொழி யென்றும் இலக்கணக் கொத்துரைத்த தேசிகர் எழுதுவாராயினர்.

"ஐந்தெழுத்தால் ஒரு பாடையும் உண்டென
அறையவும் நாணுவர் அறிவுடையோரே
வடமொழி தமிழ்மொழி யெனுமிரு மொழியினும்
இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக."

என்று தமிழ் மொழியைத் தனிமொழி யென்று கருதும் கொள்கையைத் தேசிகர் இழித்துரைத்தார். பிரயோக விவேகமும் இலக்கணக் கொத்தும் பதினேழாம் நூற்றாண்டில் எழுந்தனவாம்.

இத்தகைய கொள்கைகள் வேரூன்றி நின்ற தமிழ் நாட்டில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேல் நாட்டின் ஒளி வீசுவதாயிற்று. காலையில் எழும் கதிரவன்போல், கால்டுவெல் என்னும் மொழி நூற்புலவர் இந்நாட்டில் தோன்றினார். தென் தமிழ் நாடாய திருநெல்வேலியலமைந்த இடையன் குடி யென்னும் சிற்றூரைத் தம் இருப்பிடமாகக்கொண்ட இவ்வறிஞர், உலக வழக்கினும் நூல் வழக்கினும் அமைந்த அருந்தமிழ் மொழியை ஆர்வமுறப் பயின்றார். இவ்வாறு கால்டுவெல் தமிழ் மொழியைக் கற்றுவருங் காலத்து மலையாள மொழியை குந்தார்த்தார் என்னும் மேலை நாட்டறிஞர் மொழி நூல் முறையில் ஆராயத் தலைப்பட்டார். கர்னடக நாட்டில் வழங்கிய கன்னட மொழியைக் கிட்டல் என்னும் கலைவாணர் கற்கத் தொடங்கினார். ஆந்திர மொழியை ஆர்டன் முதலிய மேலைநாட்டறிஞர் ஆராய முற்பட்டார். தமிழ் மொழியின் ஆழத்தையும் அகலத்தையும் ஆராய்ந்தறிந்த கார்டுவெல்லாசிரியர், நாற்றிசையினின்றும் நல்லொளி வீசக் கண்டு மகிழ்ந்தார். தமிழோடு மிகுந்த தொடர்புடைய மலையாள மொழியை முட்டறுத்துக் கற்ற குந்தார்த்தர் என்னும் மொழிநூற் புலவர், மலையாள இலக்கணமும், மலையாள அகராதியும் எழுதிப்போந்தார். கன்னட மொழியை நிலைகண்டுணர்ந்த கிட்டல் என்னும் கலைவாணர் தாம் ஆராய்ந்தறிந்த உண்மைகளை அரிய கட்டுரைகளின் வாயிலாக வெளிப்படுத்தினார். ஆந்திர மொழியை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த ஆர்டன் என்னும் ஆசிரியர், தெலுங்கு மொழியின் இலக்கணம் தெரிவிப்பாராயினர். இவ்வாராய்ச்சிகளின் பயனாக, கன்னடமும் களி தெலுங்கும் கவின் மலையாளமும் தமிழ் மொழியொடு நெருங்கிய தொடர்புடைய மொழிகள் என்பது வெள்ளிடைமலைபோல் விளங்குவதாயிற்று. இந்நான்கு சிறந்த மொழிகளும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளேயாயினும், அவற்றுள் மிகத்

---

வாய்மை வாய்ந்த வாலிபர் தம்புகழிலும் பெரியோர் பக்தியையே பெரிதும் போற்றுவர்.

தொன்மையும் செம்மையும் வாய்ந்த மொழி தமிழே என்பது ஆசிரியர் கால்டு வெல் உள்ளத்தில் தெள்ளிதின் விளங்கிற்று.

இவ்வாறு திராவிட மொழிகளின் ஒற்றுமை அறிந்த ஆசிரியர், உலகில் வழங்கும் மற்றைய செம்மொழிகளையும் பொதுவுற நோக்கிப் போந்தார். இவ் வுலகில் வழங்கும் மொழிகளை, மூன்று குடும்பங்களாக மாக்ஸ் மூல்லர் என் னும் பேராசிரியர் முன்னரே வகுத்திருந்தார். ஆரியம், துரானியம், சிமிட்டி யம் என்னும் பெயர்கள் மூன்று குடும்பங்களுக்கும் மூல்லரால் கொடுக்கப்பட் டன. இவ்வகையில, இலத்தீன் கிரீக், சமஸ்கிருதம ஆதியமொழிகள் ஆரிய வகுப்பின்பாற்படும். துங்கேசியம, மங்கோலியம், துருக்கியம், பின்னியம் முதலிய மொழிகள் துரானிய வகையின்பாற்படும். அரேபியம், அரமேயம், ஈபிரேயம் முதலிய மொழிகள் சிமிட்டியவகையின்பாற்படும். இவ்வாறு மூன்று கிளையாய் முளைத்தெழுந்த முதுமொழிகளின் இயல்களை, ஆசிரியர் கால்டுவெல் ஆராய்ந்தபொழுது திராவிட மொழிகள் துரானிய மொழிகளோடு நெருங்கிய தொடர்புடையனவாக இருக்கக் கண்டார். ஆரிய குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளும் பலகூறுகளில் ஒத்திருப்பினும், அவற்றுள் அடிப்படை யான வேற்றுமை அமைந்திருக்கக் கண்டார். பாரத நாட்டில் வடமொழி யும் தென்மொழியும் நெடுங்காலமாக நெருங்கிப் பழகிவந்த பான்மையால் வடமொழியினின்றும் பல சொற்கள் தென்மொழியில் இடம் பெற்றாற்போல் தென்மொழியினின்றும் பல சொற்கள் வடமொழியில் வழங்குந் தன்மையை விளக்கிக் காட்டினர். திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் விழு மிய நூலின வாயிலாக ஆசிரியர் கால்டுவெல் இவ்வரிய உண்மைகளை வெளி யிட்டகாலத்து, மேற்கூறிய டாக்டர். குந்தார்த்தார் என்பவர், வடமொழியிற் காணப்படும திராவிட அம்சங்கள, என்று ஒரு சிறந்த கட்டுரை வரைந்து வெளிப்படுத்தினர். டாக்டா கிட்டல் என்னும் அறிஞரும், வடமொழி நிகண்டுகளில் காணபடும் திராவிட அம்சம், என்று ஒரு சிறந்த கட்டுரை எழுதிப்போந்தார். இவ்வாறு மூன்று அறிஞர் மூன்று திராவிட மொழிகளை முட்டறுத்துக் கற்று, ஒரு முடிவிற்கு வந்த முறைமை அறிஞர் கருத்தைக் கவர்வதாயிற்று.

வடமொழி அகராதியில் காணப்படும் சொற்கள் அனைத்தும் ஆரியச் சொற்களேயாம் என்று கருதும் கொள்கை மொழிநூல் முறைக்கு மாறுபட்ட தாகும் என்று இம்மூவரும திண்ணமாய் எடுத்து மொழிந்தார்கள். ஆரிய குடும்பத்தைச் சேர்ந்த ஐரோப்பிய மொழிகளில் காணப்படாத சொற்களும், கூறுகளும், வடமொழியிற் காணப்படுமேயாயின், அச்சொற்களும் கூறுகளும் இந்நாட்டு மொழிகளினின்றும் வடமொழியிற் சென்று சேர்ந்திருக்கவேண் டும் என்று கால்டுவெல் ஆசிரியர் எடுத்துரைத்த காரணம் கற்றறிந்த மாந் தர் மனத்தில் பதிந்தது. ஒப்பிலக்கணமென்னும் நூலின் அனுபவத்தில். தென்மொழியினின்றும் வடமொழியிற் சென்று சேர்ந்தனவாகக் கருதக் கூடிய முப்பத்திரண்டு சொற்களை, ஆசிரியர் கால்டுவெல் மொழிநூல் முறை யில் ஆராய்ந்து எழுதியுள்ளார். இவ்வாராய்ச்சி மொழித் திறமுணரும் மாண வர்க்குப் பெரும்பயன் விளைவிப்பதாகும்.

---

அறத்தில் ஆசையே உண்மைச் சுதந்தரம். பிற ஆசைகளால் பிணிப் புண்டவனுக்குச் சுதந்தரம் ஏது ?

# வேதாந்த ஐயவினாவும் விடையும்

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

வட ஆற்காடு ஜில்லா மேல்வாயில் கிராமத்திலுள்ள உபாத்தியாயர் திரு. எ. எஸ். நரசிம்ம ஐயங்கார் என்னும் நண்பரொருவர் வேதாந்த சம்பந்தமான சில கடாக்களை விடுத்து விடையளிக்குமாறு கேட்டிருக்கின்றார். அவர் எழுதிய நிருபத்தின் ஒரு பகுதியையும் அவ் வினாக்களையும் ஈண்டுக் காட்டுவாம்.

* * * *

"தாங்கள் வைணவராயிருந்தும் 'திருமழிசை ஆழ்வார்'போல் அத்வைத மதத்தில் ஆழ்ந்து புகுந்தமையால் அம் மத சம்பந்தமான அடியிற்காணும் கண்டனங்களுக்குத் தக்க விடையைத் தாங்கள் அன்பன் தோரணையில் "ஆனந்த போதினி"யின் மூலமாய் பிரசுரிக்கும்படி செய்து அதன்மூலம் தங்கள் விரிவான விவரணங்களை வெளியிட்டாலும் சரி, அல்லது சொந்த நிருபத்தில் எனக்கு வெளியிட்டாலும் சரி மிக மகிழ்வுடன் வரவேற்றுக் கொள்ளுவேன்."

## கடாக்கள்

(1) ப்ரஹ்மம் நிர்க்குணம் என்பது அத்வைத மதம். ஆனால் சுருதிகளில் காணப்படும் இந்தப் பதத்திற்கு ப்ரக்ருதியின் குணங்களால் தொடப்படாதது, ஹேய குணங்களற்றது, அனந்த கல்யாண குணங்களை யுடையது என்றே அர்த்தஞ் செய்யவேண்டும்.

(2) 'பிரஹ்மம் மனோ வாக்கிற் கெட்டாதது' என்ற அத்வைத சுருதிக்கு ஜீவனுடைய மனஸால் அதைப் பூரணமாய் அறியமுடியாது என்றும், மனுஷ்யனால் உபயோகிக்கப்படும் வாக்கால் அவரைப் பூரணமாய் வர்ணிக்கமுடியாதென்றுமே தாத்பரியம்.

(3) ப்ரஹ்மம் இரண்டுவித மென்றும் அபர ப்ரஹ்மம் அல்லது காரிய ப்ரஹமம் (ரூபமுடையது விகாரமுடையது பரிச்சேத முடையது) என்றும், பரப்ரஹ்மம் அல்லது காரண ப்ரஹமம் (ரூபமற்றது, விகாரமற்றது, அகண்டம்) என்றும் அத்வைதிகளின் மதம். இந்த பேதம் சுருதிகளால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. கார்ய ப்ரஹ்மம் என்பது சதுர்முகப் பிரம்மாவே. சிருஷ்டியின் ஆதியில் தோன்றும் ஹிரண்ய கர்ப்பனே.

(4) பிரஹ்மம் யாதொரு குணங்களுமற்றது என்பது அத்வைதக் கொள்கை. ஆனால், இது கேவலம் சூனிய வாதமே, நாஸ்திக மதமே. குணங்களற்ற தன்மையும் ஓர் குணமாகுமல்லவா? அப்படிக் குணங்க ளற்றிருந்தால்

---

அன்பே அனைத்தறன். மனச்சான்றே மாண்புறு வழிகாட்டி.

ப்ரஹ்ம ஞான விஷயமாய் கோடானு கோடி கிரந்தங்க ளேற்பட்டிருப்பதும் மோக்ஷத்திற்கு ப்ரஹ்ம விசாரமே சாதனமென்பதும் பொய்யாகும்.

(5) பிரஹ்மம் ஸச்சிதானந்த ஸ்வரூபம் என்றதற்கு அத்வைதிகள் விசித்திரமாய் அர்த்தஞ் செய்கிறார்கள். 'ஸத்' என்ற லக்ஷணம் வ்யாவஹாரிக, ப்ராதிபாஸிக, பாரமார்த்திக மென்று மூவகைப்படுமென்றும், பரப்ரம்மமே பாரமார்த்திக ஸத்யம். ஸ்தூல சூக்கும காரண ப்ரபஞ்சம் யாவும் இந்திரியங்களால் அடையப்படும் வ்யாவஹாரிக ஸத்யமென்றும், மனஸால் கற்பிக்கப்பட்ட ப்ராதிபாஸிக ஸத்யமென்றும் ஏற்படும். அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தாலன்றி வ்யாவஹாரிக ஸத்யம் நசிக்காது. ப்ரஹ்மத்துடன் ஐக்ய அனுபவத்தாலேயே இது அழியும். பொய்யாயும் கல்பிதமாயும் மாயையாயும் கயிற்றில் பாம்பைப்போலும் கிளிஞ்சலில் வெள்ளியைப்போலும் தோன்றும் ப்ராதிபாஸிக ஸத்யத்திற்குக் காரணம் தூலாவித்யை, தத்வ ஞானத்தால் கயிறென்றும் கிளிஞ்ச லென்றும் நேரில் பார்ப்பதுபோல் இது அழியும் என்பதும் அத்வைத சித்தாந்தம். ஆனால் இது சரியில்லை. கயிற்றில் தோன்றும் பாம்பு பிரமை கொண்டவனுடைய மனதில் தோன்றும் பொய்த்தோற்றமே. இதை எவ்வித சத்யமென்று சொல்வதும் பொருந்தாது. ப்ரபஞ்சம் வ்யாவஹாரிக ஸத்யமென்றும் அபரோக்ஷ ஞானம் இதை அழிக்குமென்றும் சொல்வது சரியல்ல. இந்த விதமான சத்யமும் சத்யமல்ல. இந்த சாக்ஷாத்காரமும் பிரமாணத்தாலும் அனுபவத்தாலும் ஏற்பட்டதல்ல. இந்த ஞானத்தால் ஸத்யம் அழியும் என்பது முற்றிலும் பொருந்தாது. நமது இஷ்டப்படி இருட்டை பிரகாசமென்றும் பிரகாசத்தை இருட்டென்றும் சொல்வதால் அந்த வஸ்துக்களின் ஸ்வரூபம் மாறுமா? ஒரு பதார்த்தம் ஸத்யமாயாவது அல்லது அஸத்யமாயாவது இருக்க வேண்டும். மூன்றாவது ஸ்திதி இருக்க நியாயமில்லை. ஸத்யத்தினும் அசத்யத்தினும் படிகளும் ஏறறத் தாழ்வுகளு மிருக்கமுடியாது.

(6) ப்ரம்மத்தைத் தவிர மற்ற யாவும் பொய்யென்றும் மித்தை யென்றும் அத்வைதிகள் சொல்லுகிறார்கள். இதற்குப் பிரமாணமாய் வேத வாக்கியங்கள் காணப்படுகின்றன வென்றால், அந்த வேதமே பொய்யாகிறது. இது ஒப்புக்கொள்ளத் தகாதது. பொய்யான சிஷ்யனுக்குண்டான பொய்யான அக்ஞானத்தை பொய்யான குரு பொய்யான வேத வாக்கியங்களால் போக்கி பொய்யான ஞானத்தை அனுக்ரஹித்துப் பொய்யான பந்தத்திலிருந்து விடுவித்துப் பொய்யான மோக்ஷத்தைக் கொடுத்தார் என்றல்லவா ஏற்படும்? இதே ஸர்வ ஸூன்ய வாதம்.

(7) ப்ரஹ்மமும் அவித்யையும் சேர்ந்து ப்ரபஞ்சத்திற்குக் காரணமென்பதும், குடம் மண்ணாய் மாறினதுபோல பிரஹ்மமே பிரபஞ்சமாய் மாறிற்றென்பதும் பரிணாம வாதம். இப்படியானால் காரணமும் காரியமும் ஒரே விதமான குணங்களை யுடைத்தா யிருக்கவேண்டும் அல்லவா? பிரமம் உபாதான காரணமா யிருந்தால் அதற்குள்ள சத்யகுணம் அதன் காரியமான பிரபஞ்சத்திற்கும் ஏற்படுகிறது.

(8) மாயை அல்லது அவித்யை யென்பது பிரம்மத்தைத் தன்னிடத்தில் பிரதி பிம்பிக்கச் செய்து ஸ்தூல ஸூக்ஷ்ம பிரபஞ்சத்திற்குக் காரணமாகிறது.

---

பெயரில் உள்ளது யாது? மல்லிகை மலர்க்கு மாறு பெயரிட்டாலும் மணம் குன்றாது.

அதனால் பிரதி பிம்பங்களுக்கு விகாரமுண்டாகுமே யொழிய மூலவஸ்துவிற்கு உண்டாகாது.

கானனீர் கிளிஞ்சல் வெள்ளி கந்தர்வ நகர்களூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின்கோடு
பீனமார் தறிபுமானில் பிரபஞ்சமெல்லாம் பொய்யே.

ஞானம் மெய் என்பது விவர்த்தவாதம். இதை விசாரிப்போம். நித்திய சுத்தமான வஸ்து எப்படி அசுத்தமாகும்? அல்லது தோன்றும்? நித்யமுக்த மான வஸ்து எப்படி பத்தமாகும்? அல்லது தோன்றும்? மாயை காரண மென்றால் மாயையாவ தென்ன? அது ஞானத்தின் இல்லாமையல்ல; அபாவ மல்ல. ஓர் இருக்கும் பதாார்த்தமே (பாவரூபமே) பொய்யான ஞானம் (அக்ஞானம்) பிரமை என்று சொல்லப்படுகிறது. அது அநாதியான வஸ்துவென் றும் பாவரூபமென்றும் சொன்னால் அது ஸத்தா? அஸத்தா? சத்தானால் அத்வைதம் நசிக்கிறது. அசத்தானால் பாவரூபமல்ல. இது ஸதஸத என்றும் இரண்டும கலந்ததென்றும் அநிர்வசனீயம் (இன்னதென்றும் சொல்லமுடியாதது) என்றும் வர்ணிக்கிறார்கள். வியவஹாரிக ஸத்யம் அவித்யையால் உண்டாகிறதென்றால் ஓர் அவித்யைக்கு வேறோர் அவித்யை காரணமாகிறது. மேலும் அவித்யை பாவரூபமானால் ஞானத்தாலாவது ஆத்ம சாக்ஷாத்காரத்தாலாவது எப்படி அழியும்? ஞானம் இல்லாததே அக்ஞானம். ஞானம் அக்ஞானத்தை அழிக்கும். அக்ஞானம் நசித்தால் ஞானம் விளங்குகிறது. ஆனால் இவ்விரண்டும் பாவரூபங்களானால் ஒன்றை யொன்று அழிக்கமுடியாது. ஓரே தேசத்திலும் இரண்டும விளங்கினலொழிய இப்படிச் சொல்ல முடியாது. இதை இப்படியிருப்பதாக அத்வைதிகள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். மேலும் அவித்யை இப்படி ஏன் செய்யவேண்டும்? பிரம்மஸ்வரூபமான ஜீவன் கிஞ்சிதஞனும் நானாபாவனையுடையவனும் ஏன் இருக்கவேண்டும்? பிரம்மம் விகாரமுள்ளதா? விகாரமற்றதா? விகாரமற்றதானால் பிரபஞ்சத்திற்கு உபாதான நிமித்த காரணங்களாய எப்படியிருக்க முடியும்? இப்படி பரிணாம வாதம் பிரயோஜன மற்றதென்று ஏற்பட்டது. விவர்த்த வாதத்தில் பிரபஞ்சம் தனியாய் ஸத்யமாய்த் தோன்றுவம் ப்ரமையென்றும் ஸ்வப்னமென்றும் சொல்லப்பட்டால் ஸ்வப்னத்தைக் காண்கிறவன் யார்? ஏன் காணவேண்டும்?"

(இவ்வினா இன்னும் தொடர்கின்ற தெனினும் கையெழுத்து விளங்காமையால விடப்பட்டது. நண்பர் விளக்கமாக வரைந்தனுப்பின் பின்னர் வெளியிடப்படும்.)

நண்பர் இவ்வினாக்களைக் கண்டனமென்னும் பதத்தாற் குறித்துள்ளார் கண்டனத்திற்கு மறுப்பெழுதும் முறை வேறு; ஐயவினாவிற்கு விடையிறுக்கும் முறை வேறு. ஆயினும் அன்பன் தோரணையில் அறிவிக்கப் பிரார்த்திக்கின்றேன் எனவும் எழுதியிருத்தலால் இருமுறையையுந் தழுவி விடையிறுப்பாம். அன்றியும்,

---

இசை யுணர்ச்சி இல்லாதவனும், இன்னிசையால் இருதயம் இளகாதவனும் துரோகம் தந்திரம் திருட்டு முதலியன செய்யத் தகுந்தவர்.

அவர் "தாங்கள் வைணவராயிருந்தும் திருமழிசை ஆழ்வார்போல் அத்வைத மதத்தில் ஆழ்ந்து புகுந்தமையால்" எனக்குறித்துள்ளார். இதில் வைணவர் என்னுஞ் சொற்குப் பொருள் இன்னதென நண்பர் நன்குணர்ந்தாரில்லைபோலும். என்னை? விஷ்ணு சம்பந்தமுடையோர் வைஷ்ணவர் எனப்படுவர் என்பது வெள்ளிடைமலை. விஷ்ணு சப்தமோ வியாபகம் என்னும் பொருளது. அந்த வியாபகப் பொருளையே யாவரும் வழிபடுவோராயிருத்தலின் யாவரும் வைஷ்ணவரே யாவர். எனவே, யாமும் என்றும் வைஷ்ணவரே என்பதை அறிவிக்க விரும்புகின்றோம். நிற்க,

"திருமழிசை ஆழ்வார்போல் அத்வைதத்தில் ஆழ்ந்து புகுந்தமையால்" என்கிறார். எனவே, திருமழிசை ஆழ்வார் அத்வைதி யென்று இவரே ஒப்புக்கொண்டவராகின்றார். ஆகவே, அத்திருமழிசை யாழ்வாரை வழிபடும் இவரும் அத்வைதியே யாகிறார். எனவே அத்வைதமத கண்டனம் இவர் தம் மத கண்டனமே யாகிறது. இக்கண்டனத்தை இவரினத்தாரையே வினவியிருக்கலாமல்லவா? எது எவ்வாறாயினும் எமக்கு விடுத்த கடாவிற்கு விடை விடுத்தல் நமது கடமை யாகலின் இனி அவற்றை விடுப்பாம்.

———:(o):———

வக்கீல்:—"குற்றம் நிகழ்ந்தநாளில் நீ ஊரில் ஆஜர் இல்லை என்று ருஜூச் செய்தால் உன் கேஸைத் தள்ளிவிடுவார்கள். குற்றம் நடந்த நாளில் உன்னை யாராவது பார்த்தார்களா?"

குற்றவாளி:—"அதிருஷ்டவசத்தால் குற்றம் நடந்தபோது என்னை யாரும் பார்க்கவில்லை.



வாழ்வாகிய வஸ்திரத்தில் எப்பொழுதும் இருவகைநூல் இருக்கும். நன்மை தீமையே அது.

# கடவுள்—கந்தழி.

(பண்டித. இராமசுப்பிரமணிய நாவலர்.)

ஆனந்த போதினியின் ஐப்பசித்திங்கள் வெளியீட்டில் பதிப்பிக்கப்பட்ட "தமிழர் கடவுட் கொள்கை" என்னுங் கட்டுரையைக் கண்ணுற்ற அன்பர் சிலர், "தமிழர்க்குக் கடவுட் கொள்கை யுண்டென்பதற்கு எடுத்துக்காட்டு யாதானு முளதா? தமிழருடைய கடளின் பெயர் யாது? கடவுளை அன்னார் எம்முறையில் வழி பட்டனர்? தமிழர் தனிக்கடவுட் கொள்கை உடையரா? ஆரியர் குடியேற்றத்தின் முன்னர்த் தமிழர்க்குக்கடவுள் நம்பிக்கை இருந்த துண்டோ?" என்றின்னோரன்ன வினாக்களை எம் மாட்டுவினவலாயினர். அன்னார்க்கு எமது சிற்றறிவைக் கொண்டு இறுக்கத்தக்க விடையாது மின்றேனும், தொல்லை இலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் கண்ட உண்மைகளை யாம் அறிந்தவாற்றான் அறைய ஈண்டுத் துணிந்தனம்.

உலகம் நாடோறும் ஒழுக்கிலும் வழக்கிலும் மாறுபட்டும் வேறுபட்டும் வருவதைக் கூர்ந்துணர்ந்த முதுக்குறையாளர், பன்னெடுநாட்கு முன்னர்ப் பாரந்தொருங் கீண்டி இவண் வாழ்ந்துவந்த தமிழருடைய ஒழுக்க வழக்க வரலாற்றை அளவிட்டுக் கட்டுரைத்தல் இயலாததொன்று என்பதைச் செவ்விதின் உடன் படுவர். துருவாசர், வசிட்டர், விசுவாமித்திரர் போன்ற முனிவரும் ஈண்டின்மையான், இக்காலத்து முக்கால வுணர்ச்சி வாயிலாக உணர்ந்து கோடலும் அரிதே யன்றோ? ஆகலான், நம்மனோர்க்கு, ஒருவாற்றான் பண்டைத்தமிழர் கொள்கையை நிறுவுதற்குத் தொன்னூல்களே துணைக் கருவிகளாம் என்பதுத் தெள்ளத் தெளிந்ததொன்று. தொன்னூற் கடலுட் புக்காடி எழுநர்க்குப் பல்வேறுபட்ட கருத்துக்கள் எழுதற்கு இடனாதலும் ஒருவர் ஒருவரைப் பல்வகையானும் மாறுகோடலும் இயல்வனவே. அஃது எதுபோலுமெனின், கடலுட் புக்கார் பலருள்ளும் சிலர் முத்து மணலும் காண்டலும், சிலர் மணலே காண்டலும், சிலர் ஆண்டுள்ள உயிரும் நவமணியும் சேறும் காண்டலும், சிலர் அளக்கரின் ஆழமளவிட்டுக் காண்டலும் சிலர் நீரையன்றிப் பிறிதெதுவும் காணாமையும், சிலர் பல காணினும் உளங் கொளாமையும் போல வென்க. இங்ஙனமாக அத்தகையார், யானைகண்டார் இயல்பையே போலக், கடலுள் முத்தே உள்ளது மணலே உள்ளது, சேறே உள்ளது, முத்து முதலியன உள்ளன, பலவுள்ளன அவை நுனித்து உணரற்பாலவல்ல என்றிங்ஙனம் கருத்து வேறுபட்டுக் கழறலும் இயல்பேயாம். நூற்கடற் பெற்றியும் அதனுட்புக்கார் பெற்றியும் இதுவே எனக் கொள்க.

---

குற்றமான காரியம் செய்யக் கூசவேண்டியது அவசியமே; ஆனால் பிறர் குறை கூறுவரோ என்று அளவு கடந்த ஜாக்ரதை அமைத்துக் கொள்பவன் அன்புடையவனாக இருக்கலாம். உயர்ந்தோனாக மட்டும் இருக்க முடியாது.

தமிழர் ஆவார் தமிழ்நாட்டை உடையார், தமிழ்மொழியை யுடையார் என்னும் இருபொருளையும் ஏற்கும். ஆகவே வடநாட்டுக்கு முரிய ரெனப் படும் ஆரியரும் தமிழரும் தம்முள் வேறுவர் என்பது பெறப்படும். அற்றன்று; ஆரியர் என்பார் உயர்ந்தார். என்றும் ஆரியர் என்னுமொழி ஐயர் என மரீஇயதென்றும் அதனனே தமிழ்நாட்டுக் குடியேறிய பார்ப்பார்க்கு ஐயர் என்னும் பெயர் வழங்கிற்று என்றும் தமிழர் ஆவார் கீழ் மக்கள் என்றும் கிளக்குநர் உளரேல்; அற்றன்று;—ஆரியராவார் கீழ்மக்கள் (மிலேச்சர்) என்றும் ஆரியம் என்னும் வடமொழி அவர்க்கு உரித்து அன்று பொதுவென்றும் அது வடமொழி எனப் படுமேனும் அபபெயர் பிற்படத் தோன்றியது. தமிழே நாவலந்தீவு முழுவதும் பரவியிருந்தது என்றும், தமிழர் என்னுஞ் சொற்கு இனியர் என்று பொருளென்றும் இசைத்து மறுப்பாரு முள ராகலான், அவ்விருவர் கூற்றும் ஈண்டைக்கு வேண்டா. ஒழுக்க வழக் கங்களில் தமிழரும் ஆரியரும் சிலச் சில வேறுபாட்டை உடையரென்பதும் அவர்கள் கால அடைவில் தம்முள் ஒருவர் ஒருவரிடத்து நின்றும் சிற்சில கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் கற்றுப் பயின்று வந்தனரென்பதும் தொன்னூ லுணர்ந்தார் உன்னி உணரற் பாலவே. அங்ஙனம் பயின்ற வற்றுள் தமிழர் ஆரியரிடத்து நின்றும் கற்றுக்கொண்டனவாய் முக்கடவுள் வழி பாடும் நெருப்பு, வாயு என்றின்னோரன்னவற்றை கடவுளாக் கோடலும், மண வினைச் சடங்கு முதலியவும் சிறந்தன. சிவன், பிரமா, விஷ்ணு என்னும் கடவுட் பெயர்களும், விநாயகர் சுப்பிரமணியன இந்திரன் முதலிய கடவுட் பெயர்களும் பார்வதி, இலக்குமி, சரசுவதி முதலிய பெண்பாற் பெயர்களும் வடமொழியாக இருத்தலானும் அவற்றுக்குத் தமிழ்ப்பெயர்களாக முதல், திரு மால், நான்முகன், முன்னோன், முருகன் முதலியவும், முதல்வி, திரு, நாமகள் முதலியவும் பின்னர் வந்தனவே எனத் துணிதற்கு இடமுளதாகலானும், அக் கடவுளரை ஆரியரிடத்து நின்றும் தமிழர் வழிபடக் கற்றுக்கொண்டன ரென் பது சாலும். நெருப்பு, வாயு இன்னோரன்னவற்றை உபநிடதங்களுள் ஆரியர் கடவுளராகக்காட்டிப் போந்தன ராகலானும் தமிழர் மணவினை நிகழ்ச்சிக் கண் தீவலஞ் செய்தலானும் திருவிளக்குக்கு மகளிர் வழிபாடு செய்தலானும் வாயுதேவன் மகன் எனப்படும் மாருதியை வணங்குங் கொட்பானும பிறவாற் றானும் நெருப்பு வாயு முதலியவற்றையும் தமிழர் ஆரியரிடத்து நின்றும் வழி படக் கற்கலாயினர் என்பது அமையும். நிலத்தைப் "பூமிதேவி" என வணங் கலும் உள தென்பதை உணரார் யாவர்? மணவினை நிகழ்ச்சிக்கு இற்றை நாளிலும் தமிழ்மக்கள் பார்ப்பாரை அழைத்துச் சடங்கு நிகழ்த்துவித்தலும், மந்திரம் ஓதுவித்தலும், தாமும் அம்மந்திர மொழிகளைக் கூறிக்கொள்ளலும், பார்ப்பார் கூறியவாற்ற அப்போழ்தத்துப் பிறவற்றையும் செய்தலும் பார்ப் பார்க்கு ஈதலும் உளவாகலின் மணவினைச் டேங்குகளையும் தமிழர் ஆரியர் மாட்டு நின்றும் பயின்றனர்.

"சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்—மாமுது
பார்ப்பான் மறைவழி காட்டிடத் தீவலஞ் செய்து"

என்றின்னோ ரன்ன எடுத்துக்காட்டுக்கள் கடைச் சங்கக் காலத்தும் பார்ப்பார் தமிழ்மக்கட்கு மணவினைச் சடங்கு நிகழ்த்தி வந்தனர் என்பதை

---

ஆசைகளை அடக்க முடியாத ஆன்மசுதந்தரம் அழிவு அளிக்கும்.

விளக்குகின்றன. அதற்கு முன்னர் இன்றேனனின், இடைச் சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாய ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத் துள்ளும் மேற்காட்டிய தெய்வவழி பாடும் காரணமுறையும் சுட்டப்பட்டுள்ளன வாகலான், தொல்காப்பியர் காலத்திலும் அவை உளவாயின என்பது உணரப் படும். தொல்காப்பிய முதலூழிக்காலத்தின் கடைக்கண்ணது என்பர் நச்சி னார்க்கினியர்.

இனி மேற்கூறிப்போர்தவற்றுக்கு இயன்றவரை சில எடுத்துக் காட் டுக்களைத் தருதும்:—

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதநெய்த லெனச்
சொல்லிய முறையாற் செல்லவும் படுமே"

(தொல். பொ. அகத். 5.)

மாயோன், சேயோன், வேந்தன், என்பார் முறையே திருமாலும் முருகனும், இந்திரனு மென்க.

இச் சூத்திரத்தான் தமிழர் நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்த லென நான்காகப் பகுத்திருந்தனர் என்பதும் அவற்றுக்கு முறையே திருமா லும், முருகனும், இந்திரனும், வருணனும் கடவுளர் எனக் கருதினர் என்பதும் பெறப்படுகின்றன. இங்ஙனம் நிலத்தை நான்காகப் பகுத்த பெருமை தமிழர் க்கே உரித்து. என்னை? ஆரியத்துள் பொருளிலக்கண மின்றாகலான். தமிழர் அங்ஙனம் நிலத்தைப் பகுத்த பின்னர் ஆரியர் அந்நிலத்தினும் தம் கடவுளரை நிறுவவேண்டிப் பிற்காலத் தமிழர்க்கு மாயோன் முதலிய கடவுளரை எடுத்து இயம்பினர் என்பதும் துணியப்படும். என்னை? அவை தமிழர்க்குரிய தெய்வ மாகக் கோடற்கு எடுத்துக் காட்டு இன்றாகலானும் வடமொழி நூல்கள் தெள் ளத்தெளிய அவற்றை ஆரியர் கடவுளர்க்குக் கூறுகின்றமையானும் என்க. இதனால் ஆரியர் தொல்காப்பியருக்கு முன்னரே தமிழ்நாட்டுக் குடியேறினா ரென்பதும், இலக்கணங் கூறவந்த ஆசிரியர் வழக்கினுட் சிலவற்றை ஒழித் துக் கூறுதல் முறைமை யன்றாகலான் தொல்காப்பியரும் அவரது காலத்துத் தமிழ்நாட்டு வழக்கை யுணர்ந்து இலக்கணஞ் செய்தார் என்பதும் போதரும். தொல்காப்பியர் ஆரியரென்றும் அவர் ஆரியர் சார்பினின்றும் தமிழர்க்கு இல் லதை புணர்த்தாரென்று சிலரும், பிற்காலத்துத் தொல்காப்பியர் சொல்லாதன பல இடைச் செருகப்பட்டன என்று சிலரும் செப்புதல் பேணத் தக்கன வல்ல. என்னை? நெடுங்காலம் வழங்கிவரும் இலக்கண நூலுட் பிறபுகுத் தின், பிறரால் அறியப்படும் என்பது ஒருதலை. சின்னாள் வழக்கின்றி யிருக்கும் நூலினகத்தாயின், அது செய்யப்படுமென்று ஒரு போழ்து நினைக்கினும் ஆம். தொல்காப்பியம் இடை கடைச்சங்கக் காலத்தும் அதன் பின்னரும்

---

செய்ய வேண்டியதை அறிவதுபோல் செய்வதும் எளியதானால், வறி ஞர் குடிசைகளும் மன்னர் மாளிகைகளாய் விடாவோ. ஷேக்ஸ்பியர்.

பெறலருமணிபோற் பேணப்படுதலின் அக்கூற்றுப் பொருந்தா தென்க. இக் காலத்துத் தொல்காப்பியத்துப் பிறவற்றைச் சிலர் இடைச்செருகின் என்படும் அச் செருகல்? அதுபோலு மன்றே அக்காலத்தும்? அன்றி இடைச் செருகின்றேல், அச்சுப்பொறி முதலியன அக்காலத்துள்ள தொல்காப்பியச் சுவடிகளிலெல்லாம் செருகல் செய்தல் இயலாத தொன்றே யன்றோ? அங்ஙனமாகவே, சுவடிகளில் சில சூத்திரங்கள் மிகுந்தும் குறைந்தும், மாறு பட்டும் வேறு பட்டும், தழுவியும் வழுவியும் இருக்க வேண்டுமே. அன்றியும் உரையாசிரியர் பாடபேதம் கொண்டனரேயன்றி இடைச்செருகல் உண்டென்று உரைத்தாரிலரே! ஆகலானும் அக்கூற்று வற்றிற்று. நிற்க; எனவே, ஆராய் வுழி, சேயோன் முதலிய கடவுளரைத் தமிழர் தொல்காப்பியர் காலந் தொட்டே வழிபட்டு வந்தன ரென்பது அமையுமென்க. ஆகலான், ஒரு காலத்துத் தமிழர் ஆரியர்க்குச் சிறப்புக் கொடுத்துப் போந்தன ரென்பதும்,—தீதிற்கேனும் நன்மைக்கேனும் அவ்விரண்டற் கேனுமாகுக—அவரைத் தமிழர் ஒருவாற்றாற் பின்பற்றி வாழ்ந்தனர் என்பதும் கைக்கனி என்னக் காட்சி தருகின்றன.

நிலப் பகுப்பில் கடவுளரை ஏற்றிவைத்த ஆரிய மக்கள் கருப் பொருளிலும் தெய்வத்தை ஏற்றிவைத்தன ரென்பதும்

"தெய்வமுணாவே மாமரம் புட்பறை
செய்தியாழின்பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவெனமொழிப." (தொல்-பொ-அகத்-18.)

என்னும் சூத்திரத்தினால் விளங்கும். ஈண்டுத் தெய்வத்தை முன்னிறீஇய தூஉம் கண்டு கொள்க. இலக்கணம் இலக்கியத்தினின்றும் உலக வழக்கினின்றும் அரும்புதலானும், தொல்காப்பியத்துச் சிறப்புப்பாயிரத்துள்,

"வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து."

எனவும் சொல்லப்பட்டதாகலானும் இன்னோரன்ன கொள்கைகள் அக்காலத்து வழக்கில் இருந்தன என்பது புலப்படும். தொல்காப்பியர்க்குப் பின்னர் பொருளிலக்கணம் செய்தாரும் அவரையே பின்பற்றினரன்றிக் காலத்திற்கேற்ப நூல் செய்தாரிலர். "இறந்தது விலக்கல்" என்னும் உத்தியால் அவ்வக்காலத்து நிகழாததனை விலக்காதுவிடின் இலக்கணம் கொண்டு விழு பயன் பெறலாகாது.

"ஆரணங் குயர்ந்தோரல்லோர் புள்விலங்
கூர்நீர் பூமா முணைப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத்தாகும்."
(அகப்பொருள் விளக்கம். 19.)

என நாற்கவிராச நம்பியும் தொல்காப்பியரைத் தழுவிச் சூத்திரஞ் செய்துள்ளது காண்க. யாழும் பண்ணும் இக்காலத்து யாண்டையா? ஆயினும், பொரு

---

பரிபூரணமே தேவரை அளக்கும் கோல். பரிபூரணத்தில் பற்றே மனிதரை அளக்கும் கோல்.

ளிலக்கணம் எக்காலத்து மொருபான்மைத்தே, வேறுபடா தென்பார் சில்லோர் என்டது மீண்டே உணர்க. ஆரணங்கு என்றது தெய்வத்தை. ஈண்டும் தெய்வம் முன்னர் நாட்டடப்பட்டது.

"அங்கண்வானத் தகடூர்ந்து திரிதரும்
திங்கட்கடவு டிரித்துநீ பெயர்த்தரின்."

என்பது உடன்போய தன் மகளைப் பெயர்ந்து மீளத் தாய் தெய்வத்தை நோக்கிக் கூறியது.

இனி, நிமித்தம், வெறியாட்டு, பலி, அரசனைத் தெய்வத் தொடுபடுத்துக் கூறல், கல் நடுதல், வாழ்த்துதல் முதலியவற்றின் கண்ணும் தமிழ் மக்கள் பார்ப்பார் தெய்வங்களையே உளங்கொண்டனர் என்பதும் கீழ்க் குறிப்பிடுபவற்றான் அறியற்பால.

"தன்னு மவனுமவளுஞ் சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப்பொரு டெய்வம்
நன்மை தீமை யச்சஞ் சார்தலென்
றின்ன பிறவு மவற்றொடு தொகைஇ......யவ்வழியுரிய."

(தொ-பொ-அகத். 36.)

"பல்லியும் பாங்கொத் திசைத்தன."

(பாலைக்கலி.)

"நாளன்று போகிப் புள்ளிடை தட்ப."

(புறம். 24.)

"புள்ளும் பொழுதும் பழித்தலல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியலர்."

(புறம். 204.)

"பச்சூன் பெய்த பைந்திணை வல்சி, பொலம்புனை கலத்திற் றருகுவன்மாதோ,
வெஞ்சின விறல்வேல் விடலையோ டஞ்சி, லோதியை வரக்கரைந்தீமே."

(ஐங்குறு. 391.)

இவற்றான் பல்லிசொற் பாங்குணர்தல், பொழுதுதரும் பெற்றி, புள்தரும் பான்மை, கொடிக்குறி (காக்கை கரைதலைக் குறியாக உணர்தல்) இவற்றைத் தமிழர் நம்பி வாழ்ந்தனர் என்பது தெரிகின்றது. இன்னும்,

---

குற்றவாளியைக் கண்டிக்கவேண்டாம். குற்றத்தை மட்டுமே கண்டிக்க வேண்டும். கண்டிப்பதோடு அமையாது கருணையும் காட்டவேண்டும். ஒரு நாள் எவ்வளவு குற்றவாளியானாலும் என்றேனும் நீதிநெறி புகுதல் நிச்சயமாதலின்.

"படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றினாகிய வேயே.

(தொல். பொ. புறத். 3.)

என்பதனான் அரசர்பானின்று பிறவரசருடைய நிரை கோடற் கண்ணும் நிரை மீட்டற் கண்ணும் நிமித்தம் ஆய்தலும் கொள்க. பாக்கத்து விரிச்சி என்பதற்கு, "நிரை கோடற்கு எழுந்தோர் போந்துவிட்ட பாக்கத்துக் கங்குலின் நல்வாய்ப்புட் கேட்டலும் நிரைமீட்டற்கு எழுந்தோர் இடைப்புலத்துப் புறம் போந்தோர் கூறியவற்றை வாய்ப்புள்ளாகக் கேட்டலும்" என உரை கூறுவர். எனவே புள்ளை நிமித்தமாகக் கோடலும் பிறர் வாய்ச் சொற்களை நிமித்தமாகக் கோடலு முண்டெனபது பட்டது.

"ஓடா உடல் வேந்தடுக்கிய உன்ன நிலை"

(தொல். பொ. புறத். 5.)

என்பதனான் உன்னமரத்தை வீரர் தம் வெற்றிக்கு அறிகுறியாக நிமித்தமாகக் கொள்வது முளது என்பது போந்தது. உன்ன நிலையாவது:—

"வேந்தன் கருத்தானன்றி அவன் மறவன் வேந்தற்கு நீ வெற்றி கொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வல் எனப் பரவுதலும், எம் வேந்தற்கு ஆக்க முளதெனின் அக்கோடு பொதுளுக எனவும் பகை வேந்தற்குக் கேடு உளதெனில் அக்கோடு படுவதாக என நிமித்தம் கோடலும் என இருவகைத் தெய்வத் தன்மை" (நச்சினார்க்கினியர்)

"முன்னங் குழையவுங் கோடெலா மொய்தளிரீன்
றுன்னங் குழையாவித் தோங்குவாய்—மன்னரைக்
கொன்றுகளங் கொள்ளுங் கொல்யானை வேந்தனை
வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து"

(நச்சினார்க்கினியர் காட்டிய பாட்டு)

என்பதனால் உன்னநிலை யறிக.

இவையெல்லாம் தெய்வத்தை நேர்முகமாக வழிபட்டதாகக் காட்டிற்றில வேனும் தெய்வஞ் சுட்டி நிறுவுதலின் தெய்வங் கொள்கையை நுதலிற்றென்பது நுனித்து உணரப்படும். அன்றியும், "இருவகைத் தெய்வத்தன்மை" என நச்சினார்க்கினியர் கூறுவதூஉங் கண்டுகொள்க. இந்நிமித்தங்கள் யாதானுமொரு கடவுட் பெயர் சுட்டிவாராமையானும் புட்கேட்டல் பாக்கத்து விரிச்சி என்பன முதலியன தனித் தமிழ்ச் சொற்களாகலானும் பண்டைத் தமிழருடைய வழக்கு எனக் கோடற்கு இடமுண்டு. தமிழர் ஆசிரியர் வருமுன்னர்த் தமக்கென ஒரு கடவுட்கு இயற்பெயர் சார்த்தி வழங்கு வழக்க முடையா ரல்லர் என்பது ஒருவாற்றான் மேல்போதந்து கூறுமாற்றான் உணர்ந்து கொள்க.

---

அயலார்க்கு நன்மை செய்யும் பொழுதுதான் ஆண்டவனை ஸ்துதிப்பதாகக் கூறமுடியும்.

# காளிதாசன்.

(ஏ. ஆர். மலையப்பன்.)

வடமொழி யன்னையின் செல்வப் புதல்வனும் மஹாகவி காளிதாசனைப்பற்றி ஓர் கதையுண்டு. அது வருமாறு:—ஓர் மன்னன் மகள் பற்பல கலைகளையும் பருவத்திலேயே கற்றுக் கன்னிமாட மெய்தியிருந்தாள். தனக்குவந்த நாயகனைக் கல்வி கேள்விகளில் வல்லுநனையே மணப்பதென்றும் அவனும் தன்னாலேயே பரீக்ஷிக்கப்பட வேண்டுமென்றும் உறுதி கொண்டாள். அப்படியே அவள் தனது பிதாவின் சமஸ்தானத்திலுள்ள சகல பண்டிதர்களையும் மந்திரிகள் மூலமாய் வரவழைத்துப் பரீக்ஷித்தாள். அவர்கள், அவளிடம் தோல்வியுற்றமையால் மற்றைய மன்னரது புலவர்களையும் வரவழைத்தாள். அவர்களும் அவளிடம் தோல்வியுற, மந்திரிகள் மனம் நொந்தனர். "அம்மையே! இனி உலகில் வேறு பண்டிதரும் உண்டோ? இருந்தாரனைவரும் வருந்திச் சென்றனர். ஆதலி னிவருளொருவனே யுன்னால் மணக்கத் தக்கவன்" என வணக்கமாகக் கூறினர். இந்நன்மொழிக்குச் செவிசாய்க்காத நங்கை மற்றுமுள்ள கற்றவரைக் கொணர்கவெனக், கட்டளையிட்டாள். தாங்கள் கூறியதைக் கேட்காமல் தங்களுக்குக் கட்டளையிட்டதைக் கேட்ட மந்திரிகள், சினத்தீயிற்பட்டு, இவளது கருவத்திற்கேற்ற கணவன் கயவனே என முடிவு செய்து மருகன் தேடப் புறப்பட்டனர். சிறிது தூரம் சென்றதும், ஓர் இடையன் பல ஆடுகளை மேயவிட்டு, அவைகட்குத் தழை கொய்வான் வேண்டி மரமேறி, நுனிமரத்தே தங்கி, அடிமரத்தை வெட்டுவதைக் கண்டனர். கண்டதும் களிப்பெய்தி, இவனே யந்நங்கைக் குரியவன் என முடிவுசெய்து, அவனுக்கு நறுமணச் சாந்தொடு நன்னீராட்டிப் புத்துடை யணிவித்து, நீ இப்பொழு தரசநங்கையை அடையப் போகிறாய், ஆங்கவளுன்னைப் பலவாறு வினவுவாள், ஒன்றுக்கும் விடையளிக்காதே. ஏதாவது பேசினுன்னைக் கொன்றுவிடுவோம் எனக் கூறி சிவிகையி லேற்றுவித்துத் தாமே யதைத் தாங்கிச் சென்றனர். அரசிளங்குமரியை யடைந்ததும், "அம்மையே! இவர், சாதாரண மனிதர்களுக்குப் பதில் கூறுவதே கிடையாது" என்றனர். மந்திரிமார் சிவிகை தூக்கிவந்ததையும், அவரது வாய்பேசாமையையும் திடகாத்திரத்தையும், உற்று நோக்கிப் பெரிய புலவரென மதித்து மாலையிட்டாள். இடையனோ, தன்னைப் பலிகொடுக்கவே மாலை சூட்டுகிறாளென மதித்துள்ளம் புழுங்கினான். அன்று பகல் சிவிகையில் வந்த களைப்பால் ஓர் புறமடைந்து நன்றாக வுறங்கினான். இரவு மன்னவன் மகள் படுக்கையுள்ளடைந்து அவனுக்குத் தாம்பூலம் தூங்கும்பொழுதே யருத்தினாள். அதுவரை தூங்கிய மணமகன், அதுபோது விழிப்புற்று, "அட, ஆடே! புழுக்கையிடுதற்குப் புற்றரை யிருக்க வாயிலா இடுவது? செல்லெனக்

---

அறிஞர்க்கு அநேகமாக அனைத்தும் நகையாடற்கு உரியதே; ஆனால் சான்றோர் நகையாடுதல் அரிது.

கடிந்தான். அதுகேட்டு நங்கை பெரிதும் சந்தேகித்து நீயாருண்மை கூறு! அன்றேல் மீளப்பெறுய்'' என உறைவாளையுருவி மருட்டிக்கேட்டனள். இடையனும் தனது வரலாற்றை யொன்றுவிடாமற் புகன்ருன். அதுகேட்டு வெட்கமும் பரிதாபமுமுற்ற நங்கை, ஐய! நீ இப்பொழுதே இவ்விடம் விட்டகன்று, இவ்வூரின் புறத்தேயுள்ள காளிகோயி லடையவேண்டும். இது நோமவள் வெளியே சென்றிருப்பாள். நீ உள்ளே சென்று கதவை மூடித் த ழிட்டுக்கொள்ள வேண்டும். அவள் திரும்பிவந்து கதவைத்திறவென்று பயமுறுத்துவாள், கொல்வேனென்பாள், தின்பேனென்பாள் என்ன கூறியபோதினும் சிறிதுகூட மனம்தளரக்கூடாது. இச்சிறு கதவின்கண் வழியே உன் சூலத்தால் என்னுக்கில் பீஜாக்ஷரத்தை யெழுதிக் கொல்வதில்லையென யுறுதிமொழி கூறு என்று கேள். பிறகு உன்னுவில் பீஜாக்ஷரத்தை யெழுதிக்கொண்டு இங்குவா, உனக்கு மங்கள முண்டாகட்டுமெனக் கூறி யவனை யனுப்பினுள். இடையனும் அவள் சொற்படியே செய்து, பீஜமந்திரம் எழுதிக்கொண்டு கதவைத் திறந்ததும், "மாணிக்ய வீணும்" என வாரம்பித்து, "சயாமலா தண்டகம்'' என்னும் துதியை யியற்றினுன். அதுமுதலே யவன் "காளிதாச" னெனக் காரணப் பெயர் பூண்டான். பிறகவ னரண்மனை யடைந்து தனது மனையாளைக் குருவாக மதித்து நமஸ்கரித்தான். அது கண்டவளவனை வாரியெடுத்து, "நாவன்மை யேதாவதுண்டா'' என்னும் பொருளுள்ள "அஸ்தி" "கச்சித்' "வாகர்த்தஃ'' என்பதை வினவினுள். அதைக் கேட்டதும் வேதவாக்காக மதித்து அம்மூன்று மொழிகளுள் "அஸ்தி" யென்பதை முதலில் வைத்து குமார சம்பவமும், "கச்சித்'' என்பதை முதலாக்கி மேகசந்தேசமும், "வாகர்த்தஃ'' என்பதை முதலாக்கி ரகுவம்சமுமாகிய இம்மூன்று காப்பியங்களையு மியற்றினுன். பிறகு, அவள் என்னுடன் கூடி இல்லறம் நடாத்தென்று கூறியபோது நீ எனக்குக் குருவானுய். இனியுன்னைச் சேரமாட்டேன். அதோடன்றி இனி யான் மணம்புரிவதே யில்லை யென வாணையிட்டுப், போஜராஜனை யடைந்து அவனது சபையை யலங்கரித்தனன் என்பதாம்.

இனி இக்கதை யுண்மையா வென்பதை யுற்றுநோக்குவாம். வடமொழி யுலகில் காளிதாஸன் என்பார் இருவருளர். ஒருவன், கி. பி. 5-ம் நூற்றாண்டில் உள்ளவன். மற்றவனே கி. பி. 12-வது நூற்றாண்டோன். முற்கூறிய காளிதாஸனே ரகுவம்சம், குமார சம்பவம், மேக சந்தேசம், என்னும் காப்பியங்களையும், மாளவிகாக்நிமித்ரம், விக்ரமோர்வசீயம், சாகுந்தலம் என்னும் நாடகங்களையும் இயற்றியுள்ளான். மற்ற காளிதாசன் தான் சுருதபோதம், ருதுசம்ஹாரம் முதலியவைகளை யியற்றியவன்.

முக்காப்பிய மியற்றியமையின், முற்கூறிய காளிதாஸனை இக்கதை சாருமோவெனில், அவன் காப்பிய மியற்றினுனே யொழிய போஜனைச் சாரவில்லை. அன்றியும் இக்கதையின் மூலமாக நோக்கின், முதலில் குமார சம்பவமும், பிறகு மேக சந்தேச ரகுவம்சங்களும், இயற்றப்பட்டிருக்க வேண்டும். காளிதாசனே முதலில் ரகுவம்சத்தையும், பின்பு குமார சம்பவ மேகசந்தேசங்களையு மியற்றியுள்ளான். இதற்குச் சான்றே, ஒருவன் கடவுள் வணக்கம், அவை யடக்கம், முன்னுரை, கூறுவதெல்லாம் காரியத்தினாம்பத்திலேயே

---

ஒருவன் ஒன்றை உண்மை என்று ஆராய்ந்து உறுதி செய்து விட்டால் அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் அவனுக்கு உண்டு.

யாகும். நமஸ்கார ரூபமான மங்களமும், அவையடக்க மூன்னுரைகளும், ரகுவம்சத்திலேயே காணப்படுகின்றன. குமார சம்பவ, மேகசந்தேசங்களோ, வஸ்து நிர்த்தேசத்தையே உடையன, ஆதலினிக்கதை முற்கூறிய காளிதாச னியற்றியதல்ல வென்பது முக்காலு முண்மையே.

பிற்கூறியவனை "ச்யாமலாதண்டகம்" இயற்றினமையின் சாருமோ வெனின், அவன் அப்புத்தகம் இயற்றினபோதிலும் "அஸ்திகச்சித்வாகர்த்த:" என்பது குமார சம்பவம் முதலியவைகளைப்பற்றியது. குமார சம்பவமும், முற்கூறிய காளிதாசனால், இயற்றப்பட்டதாகையாற், பிற்கூறியவனையு மிக் கதை சாராது.

அன்றி "குமாரசம்பவம்" முதலிய நூல்களை பிற்பட்ட காளிதாச னியற்றியதாகக் கூறியவனைச் சாருமோவெனின், ஆதிசங்கரர் தமது பாஷ்யத் தில்,காளிதாசனது குமாரசம்பவ வார்த்தையை யெடுத்துக் காட்டாகத் தந் துள்ளார். அவரது காலமும் கி. பி. 7-வது நூற்றாண்டாம். 7-ம் நூற் றாண்டு மனிதர் வார்த்தையை எடுத்துக் காட்டாகக் கூறமுடியாதாதலின் 5-ம் நூற்றாண்டு காளிதாசனே இவைகளை யியற்றியுள்ளான். இதனாலும் பிற் பட்டவனைச் சாராதென்பது வெள்ளிடை மலையாம்.

இப்படி வடமொழியில் அலங்கார நூலார், "கவிகளும் இரண்டு மூன்றே" "காப்பியங்களும் இரண்டு மூன்றே," என்று கூறும், சீரிய சித்தாந்தத்தில் சேர்க்கப்படும் காளிதாசனை இடையனுக்கி, 5-ம் நூற்றாண்டு களிதாசனை யும் 12-ம் நூற்றாண்டு காளிதாசனையும் ஒன்றாகப் பண்ணியதறகேற்ப கதை கட்டல் நமக்கே இழிவன்றோ?

இரு காளிதாசரும் உயர்குலத்தவரே.

## சந்தா நேயர்களுக்கு

நமது "ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை ஒவ்வொரு தமிழ் மாத முதல் தேதியிலும் எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தப்படாமல் தபாலில் சேர்க்கப்பட்டு வந்தும் சிலர் சஞ்சிகை கிடைக்கவில்லை என்று எமக்கு அடிக்கடி தெரிவிக்கின்றனர். இந்த நண்பர்கள் அந்த அந்த ஊர் போஸ்டு மாஸ்டருக்கு விஷயந் தெரிவித்தால் சஞ்சிகைகள் ஒழுங்காகக் கிடைத்து வரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ப-ர்.

---

அயலார்க்கு அன்பு செய்வதில் ஆநந்தம் காண்பவனே உண்மையில் இன் பம் துய்ப்பவன் ஆவான்.

# ஓர் அரிய செய்யுளின் பொருள்

(அம்மாபட்டி ஜி. சுப்பையா)

"ஆனந்தபோதினி" மாத சஞ்சிகை தொகுதி 17 பகுதி 6-ல் மாதர் உலகம் என்ற தலைப்பின் கீழ் 'வியாஸ பாரதமும், வில்லி பாரதமும்' என்று குறிப்பிட்டு அதை யாராயப் புகுந்து, ஸ்ரீமதி பண்டிதை அசலாம்பிகை யம்மையார் அவர்கள் வில்லி பாரதம் பழம்பொருந்து சருக்கம் "ஐம்புலன்களும் போல்....................வசிட்டன் நல்லறமனைவியே யனையாள்" என்ற செய்யுளை எடுத்துக் கொண்டு, பெண் தன்மையை உண்மைக்கும், இயற்கைக்கும் மாறாக நடுங்காது கூறப்பட்டிருக்கும் பாக்களில் ஒன்று என்று மிக இலேசாகக் குறிப்பிட்டுள்ளார்கள். நீதிநெறி விளக்கம், காசிகாண்டம இவற்றைப்பற்றி வரைய முன்வரவில்லை. மேற்கண்ட செய்யுளைப்பற்றித் தாம் "அநேக பண்டிதர்களைப் பொருள் கேட்டதாகவும், ஆனால் அப்புலவர்கள் அனைவரும் ஷெ செய்யுளுக்குப் பொருள் வேறுவிதமாகச் செய்யலாமோ? என அமையாத யுக்திகளெல்லாம் புகுத்திப் பார்க்க முந்தினர்" என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஸ்ரீ அம்மையாரவர்கள் பல புலவர்கள் சொன்ன பொருள்களை குறிப்பிக்கவில்லை. அவரும் தாம் கொண்ட பொருளைத் தமக்கு அப்பொருளில் வெறுப்புள்ளது என்றும், இத்தகைய அடாப் பழியைத் தமிழ்ப் புலவர்கள் கண்டிக்க முன்வராத காரணம் யாதோ என்றும் குறிப்பித்துள்ளார்கள். ஆகவின் இக்கட்டுரை வரையும் முக்கிய நோக்கம் அச் செய்யுளுக்கு வேறு உண்மைப் பொருளுண்டென்பது காட்டுதலேயாம்.

"ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிக ளாகவும் இன்னம்வே றொருவன்
எம்பெருங் கொழுநன் ஆவதற் குருகும் இறைவனே எனது பேரிதயம்
அம்புவி தனிற்பெண் பிறந்தவ ரெவர்க்கும் ஆடவர் இலாமையி னல்லால்
நம்புதற் குளதோ என்றனள் வசிட்டன் நல்லற மனைவியே யனையாள்."

இதுதான் அச்செய்யுள்.

இச் செய்யுள் பயிலும் சந்தர்ப்பமாவது:

பாண்டவர்கள் திரௌபதியுடன் காட்டில் வசிக்கின்றார்கள். இனி நடக்கப்போகும் அரிய பெரிய செயல் அக்ஞாதவாசம் ஓராண்டு. இவ்விடயமாக இந்த ஆறு பேருடைய மனதிலும் தொலையாத எண்ணங்கள். எல்லாரையும்விட மிக சிரேஷ்டமாக திரௌபதியின் எண்ணம் பல. என்னெனில்

---

தாய்நாட்டிற்காகச் சமர் செய்வதே தலைசிறந்த தனிப்பெரும் நற்சகுனமாகும்.

தான் கூந்தலை வாரி முடியவேண்டும், அதற்குத் தான் சொன்ன சபதம் நிறைவேற வேண்டும் என்பதே. அதிலும் திரௌபதியே பாரத யுத்தத்திற்குக் காரணம் ஆனதாலும், வாரணாவதச் சருக்கத்து,

"மண்மே லொருத்தி யரக்கர்குல மாளப் பிறந்தாண் வாமனுதற்
கண்மே லின்றுமிவள் பிறந்தாள் கழற்காவலர்தங் குலமுடிப்பாள்"

என்று கூறியுள்ளார். ஆகலின் திரௌபதியின் எண்ணம் எல்லாம் பின் நடக்கப் போகும், அக்ஞாதவாசம், போர் செய்தல், சபதத்தை நிறைவேற்றி வைத்தல் முதலியவைகளிலேயே என்பது வெள்ளிடைமலை. இந்நிலையில், ஒரு கனியின் காரணமாக ஐந்துபேரும், திரௌபதியும் தங்கள் தங்கள் மனக் கருத்தை உள்ளது உள்ளபடியே தெரிவிக்க வேண்டிய அவசியம் வந்துவிட்டது. தருமன் முதல் ஐந்துபேரும் தத்தம் மனக்கருத்தை அறிவித்தபின், திரௌபதியும் தன் மனக்கருத்தை அறிவித்ததாக வில்லிபுத்தூராழ்வார் திரௌபதி வாயிலாக இச்செய்யுளை உரைக்கின்றார். இச்செய்யுட்குப் பலர் பலவாறு உரை கூறுவர். அவற்றுள் இவண் இரண்டொன்று குறிக்கின்றேன்.

ஒரு சாரார் கூறும் பொருள் வருமாறு:

வசிட்டனுடைய நல்லற மனைவி அருந்ததி யனையளாய திரௌபதி இறைவனே எனது பெரிய மனமானது ஐந்து புலன்களைப்போல் ஐந்துபேர்களும் நாயகர்களாகவும் இன்னமும் வேறொரு மனிதன் எமக்குப் பெரிய புருடன் ஆகவேண்டும் என்பதற் குருகும். இங்ஙனமிருக்க அழகிய பூமியினிடத்துப் பெண்ணாகப் பிறந்த எல்லாருக்கும் ஆடவர்கள் உண்மையினால் கற்பின் திறத்தைப்பற்றி நம்புதற்குளதோ? இல்லை என்றனள். (என்றவாறு)

மற்றொரு சாரார் கூறும் பொருளாவது:

வசிட்டனுடைய நல்லற மனைவியாகிய அருந்ததி யனையளாம் துரௌபதி, இறைவனே! எனது பெரிய மனமானது ஐந்து புலன்களைப்போல் ஐந்துபேர்களும் நாயகர்களாகவும் இன்னும் கர்ணன் என்பவனும் எமக்குப் பெரிய புருடனாக வேண்டும் என்பதற் குருகும் என்பது. பின்னடிகட்குப் பொருள் மேற்கண்டபடியே.

நிற்க, திருவாவடுதுறை யாதீன வித்துவானும் மதுரைத் தமிழ்ச்சங்கச் சைவநூற் பரிசோதகருமாகிய சேற்றூர் ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்கள் பல பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்துத் தாம் எழுதிய, மதுரைத் தமிழ்ச்சங்கத்து மகாபாரத அரும்பதவுரையில் "ஆடவரில்லாமையினல்லால்—புருடருண்மையினால், நம்புதற்குளதோ—அப்பெண்களைப் பதிவிரதைகள் என்று நம்புவதற்கில்லை. ஓ—எதிர்மறை. ஆடவருண்மையினாற் கண்டவுடன் பெண்களின் மனம் விரும்பும் என்றபடி. இது வேற்றுப் பொருள்வைப்பணி. நினைத்தாற் றோஷமில்லை யென்பது, துவாபரயுக தருமமாக ஸ்மிருதியிற் கூறப்படலால், வேறொருவன் எம்பெருங் கொழுநனாவதற் குருகும் என்றாள். ஆதலால் வசிட்டனல்லற மனைவியே யனையாள் என்றார்" என்று காட்டியுள்ளார்.

---

ஒருவன் அடிமையான வுடன் அவனுடைய நற்குணங்களில் செம்பாதி சிதைக்கப்பட்டு விடுகிறது.

இச்செய்யுளுக்கு மேற்சொன்ன ஒரு சாரார்து பொருளைக் கொண்டால் "ஐம்புலன்களும்போல்.........உருகும்" என்று சொல்லும் துரௌபதியைக் கற்புடையவள் என்னலாமா? அத்திரௌபதிக்கு உவமையாக வசிட்டன் நல்லற மனைவியைக் கொள்ளலாமா? திரௌபதி தன் எண்ணம் மட்டும் சொல்லுதலோ டமையாது உலகத்துப் பெண்களின் தலையில் கை வைப்பானேன்? என்ற வினுக்கள் எழுதலோடு அமையாது பின்னும்,

"என்னைத் தோற்று மனுநெறிகூ றிசையோன் றன்னைத் தோற்றனனோ
தன்னைத் தோற்றுத் தனதுமனத் தளர்வால் என்னைத் தோற்றனனோ
முன்னைத் தோற்றுத் தோற்றபொருண் முற்றுங் கவரு முறையன்றிப்
பின்னைத் தோற்றப்பொருள் கவரப் பெறுமோ"

என்றும்,

சபையினிடத்துத் திரௌபதி அவைக்களத்தோரைக்கண்டு கேட்குங்கால் துரியோதனனுக்குப் பயந்து திரௌபதிக்காகப் பேசாதும், நீதிதவறும் என்று அஞ்சி துரியோதனனுக்காகப் பேசாதும், அரசர் வாளா விருந்தனர். அந்நிலையினை,

"பொய்யோ வன்று மெய்யாகப் புனையோ வியம்போ விருந்தாரை
யையோ அந்தக் கொடுமையையா முரைக்கும் பொழுதைக் கதிபாவம்"

என்றும்,

திரௌபதிகேட்ட நீதி நுட்பத்திற்கு விடை பகர முடியாமல் அரசர் கூட்டம் தத்தளிக்க, அப்போது அறிவுடைய விகர்ணன் வாயிலாக,

"தன்னேரில்லா நெறித்தருமன் றனவென் றுரைக்கத் தக்கவெலா
முன்னே தோற்றுத் தங்களையு முறையே தோற்று முடிவுற்றான்
சொன்னே ருரைக்குத் தான் பிறர்க்குத் தொண்டாய்விட்டுச் சுரிகுழலைப்
பின்னே தோற்க வுரிமையினாற் பெறுமோ வென்று பேசீரோ?"

என்றும்,

நன் முறையில் நீதிகளைக்கூறிய வில்லி புத்தூராழ்வார் பெண் தன்மையை அருவருக்கத்தக்கமுறையில் நீதிபுகட்டலாமா? நூலாசிரியரும் கடவுள் அருள் வழிப்பட்டவருமாகிய ஆழ்வாரவர்களே பிறழ்ந்தனரே? என்ற வினுக்களு மெழுமாலோ வெனின்? எழும் என்க. திரௌபதி அங்ஙனம் வெறுக்கத்தக்க பொருளை நினைத்தவளுமல்லள், சொன்னவளு மல்லள் என்பதும், ஆழ்வாரவர்கள் வெறுக்கத்தகும் முறையில் நீதியைச் சொன்னவரல்லர் என்பதும் நன்முறையில் ஆங்காங்கு கதைப்பாத்திர வாயிலாக நீதிகளைப் புகட்டினர் என்பதும் எனது துணிபு,

மற்றொரு சாரார் கொள்கைப்படி வேறொருவன் என்பதற்குக் கர்னன் எனக் கொண்டால், திரௌபதி கன்னனைக் காணுதற்குச் சமயம், சுயம்வர மண்டபம் அன்றி வேறு சந்தர்ப்பமேயில்லை. அச்சுயம்வர மண்டபத்தில்,

---

உண்மை நெறிநின்று சுதந்தரம் பெறுபவனே சுதந்தரன். வனையோர் எல்லோரும் அடிமைகளே.

எல்லா வரசர்களும் வின்னுண் எற்றும்போது திரௌபதிக்குப் பல எண்ணங்கள் நிகழ்ந்தன என்றும், நினைத்தாள் என்றும், ஆழ்வாரவர்கள் சொன்னாரில்லை. அச்சமயத்து, வேறொருவரை நினைத்திருந்தாள் என்பதற்கும், வேற்றெண்ணம் திரௌபதிக்கு நிலைத்திருந்தது என்பதற்கும் சிறிதேனும் இடமின்றி

"மங்குலின் மங்குன் மூடி வயங்கொளி மறைந்து தோன்றாச்
செங்கதிர் செல்வன்போலச் சீர்கெழு வடிவமாறி
யங்கவர் இருந்த தன்மை யறிந்ததோ செறிந்த பொய்கைப்
பங்கயம் போன்றதா லப்பரிவுறு பாவை பார்வை"

என ஆழ்வாரவர்கள் தெற்றென விளக்கி யுள்ளார். ஆகலின், வேறொருவன் என்பதற்கு கன்னன் எனறு கொள்வதற்கே எட்டுணையும் இடமேயில்லை. கர்ணனையேதான் நினைத்து "இன்னும் வேறொருவன் எம்பெருங் கொழுநன் ஆவதற் குருகும் என்றாள் எனில், எம், ஆவதற்கு, என்னும் இவ்விரு சொற்களும் முறையே என், ஆனதற்கு என்றிருத்தல் வேண்டும். அங்ஙனமின்மை பற்றி, அவ்வாறு பொருள் கொள்ளுதல் பொருந்தா தென்பதே யொருதலை.

இனி இச் செய்யுளுக்கு உண்மைப்பொருள் யாதென நோக்குவாம். இச் செய்யுள் பயிலும் சந்தர்ப்பத்தில் திரௌபதியின் எண்ணம் இருந்த நிலையை முன்பே விளக்கி யுள்ளோம், ஊன்றிப் பார்ப்பீர்களாக. உண்மைப் பொருள் வருமாறு:

(பதவுரை) வசிட்டன்—வசிட்டனுடைய, நல்—நல்ல, அற மனைவி(யே)—அறத்தன்மை பொருந்திய அருந்ததியை, அனையாள்—ஒத்த திரௌபதியாவள், இறைவனே—எம்பெருமானே, (கண்ணனே) எனது—என்னுடைய, பேர் இதயம்—மாண்புமிக்க மனதானது, ஐம்புலன்களும்போல்—ஐந்து புலன்களைப்போல், ஐவரும்—(இடைவிடாது நெருங்கி எனக்கு உரியவர்களாக) ஐந்து பேரும், பதிகளாகவும்—நாயகர்களாய் இருக்கவும், இன்னும்—மறுபடியும், வேறு ஒருவன்—வேறு ஒப்பற்ற முதல்வனாகிய இறைவனொருவனை, எம்—(ஐவரும் அடியேனுமாகிய) எமது (நாங்கள் இப்போது நினைத்துள்ள காரியங்கள் இடையூறு நிகழாமல் நிறைவேற்றி வைக்க), பெருங்கொழுநன்—பெருமை பொருந்திய தலைவன், ஆவதற்கு—(இதற்குமுன் எங்கள் காரியங்கட்கு உதவியதுபோல்) இனிமேலாகும் காரியங்கட்கும் உதவியாகும்படி, உருகும்—நினைந்து நினைந்து உருகும், அம்புவிதனில்—அழகிய பூமியில், பெண்—பெண் ஜென்மமாக, பிறந்தவரெவர்க்கும்—பிறந்த எல்லார்க்கும், ஆடவரில்லாமையினல்லால்—புருடர் உண்மையினால் (மட்டும்), நம்புதற்குளதோ—(இறைவன் துணையின்றி) நினைந்திருக்கும் காரியங்கள் நிறைவேறும் என்று நம்புதற்குளதோ, இறைவன் துணையிருப்பின் நிறைவேறும் என்பதற்கு ஐயமில்லை என்றவாறு.

(குறிப்பு). ஐம்புலன்களும்போல் ஐவரும் என்றது என்னெனின், திரௌபதி ஐம்புலன்களும்போல் என்றாள். உலகத்து மக்கள் பொறியாலனுபவிக்கப்படும் புலன்கள் ஒன்றை யொன்றே (ஒரு பொறி ஒரு புலனையே) பற்றி நிற்கக் காண்கிறோம். திரௌபதியாகிய பெண்பாலிடத்து ஐம்புலன்களும், ஒருங்கு நிகழுந்தன்மையையே உண்மையாக்கி அப் புலன்கள்போல்

ஐவர் என்றார் ஆழ்வார். பெண்ணிடத்து ஐம்புலனும் ஒருங்கு நிகழுந் தன்மை யுண்டோ வெனின் உண்டு. "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புல னும், ஒண்டொடிக் கண்ணேயுள" என்றதே சான்று பகரும். இவ்வுவமை மிக நயமுடைத் தென்பதும், புலனைந்தும் ஒவ்வொன்றன் தொடர்புடையது, அங்ஙனமே, இவ்வைந்து பேரும் யாரொருவர் பிரிய நேரினும் மற்றை நால்வ ரும், உடல் பிரிந்திருக்க உடன்பட்டாலும், மனம் பிரிந்திருக்கமாட்டார் என் பது உண்மை. ஒருவரை யொருவர் மன வொற்றுமையில் எட்டுணையும் பிரி பவர்கள் அல்லர் என்பதும் காட்டுதற்கே என்க. இன்னும் வேறேநுவன் என்றது: அணுவினும் அணுவாய், அண்ட சராசரங்கட்கு அப்பாலாயும் இப் பாலாயும் விளங்கும் ஒப்பற்ற முதல்வன் என்பதற்கேயாகும். எம் என்றது என்னெனின்? துரௌபதி தனக்கு முன்னிலையிடத்தாராகிய பாண்டவர்களை யும் தன்னையும் உளப்படுத்திச் சொன்னாளென்க.

பெருங் கொழுநன் என்றது எற்றாலோ வெனின் காட்டுதும். தலைவன் என்னும் பொருள் படுதற்குக் கொழுநன் என்பதுமட்டும் சொல்லினமையுமே பெருங் கொழுநன் எனப் பல்கியதனாற் பெறப்படுவது யாதோவெனின்? தலை வன் இறைவன்) மலையிடிந்து வீழினும், சூரிய சந்திரர் திசைமாறி உதிப்பி னும், தாரகைக் கூட்டங்கள் பூமியில் உதிரினும், இறைவன்மட்டும் தன் (தலை மைத் தொழிலின்றும் நீங்காது, ஒழியாதிருப்பன் எனக் காட்டுதற்கென்க.

ஆவதற்குநுதும் என்றது: மக்களாவார் ஒவ்வொருவரும் இறந்த காலத் தில் எவ்வெவ்வரிய காரியங்கள் நிகழ்ந்திருப்பினும் எதிர்காலத்தில் வரும் காரியங்களையே பெரிதும் மலைபோல நினைத்திருப்பாராதலின், திரௌபதியும் தான் நினைத்துள்ள காரியங்கள் முற்றுப்பெறக் கருதிச் சொன்னாளென்க. இறைவனே யென்றது, இறைவனுக்கு வேறொரு தலைமைத் தன்மை யின்மை யென்பதும், தனக்குத்தானே தலைமை என்பதும் காட்டுதற்கென்க.

பேரிதயம் என்றது என்னை? திரௌபதி இதயம் சிறிய இதயம் அன்று, அற்ப காரியங்களை எண்ணுபவள் அல்லள். உலகிற்குபகாரமாம் காரியங்களை யே நினைப்பவள். அக்கற்புடை யாசியும், அதற்கெனவே பிறந்தாள். ஆகலின், உலகோர்க்கும் ஒப்பத் தகுந்தவைகளையே நினைப்பவள் என்று காட்டுதற்கே யென்க.

இங்ஙனம் திரௌபதி "ஐம்புலன்களும்போல் ஐவரும்......உருகும்" என்று கூறியவள், அதனோடு விட்டிருக்கலாம், அங்ஙனமின்றி, "அம்புவிதனிற் பெண்...நம்புதற்குளதோ" என்று சொல்லாவிட்டால் வருமிழுக் கொன்றுமில் லையே யாகலின், இரண்டாம் வாக்கியப் பொருள், முன் வாக்கியப் பொருளை ஐயப்படச் செய்கின்றதுவோ எனின், ஐயப்பாட்டினைத் தருவதன்று. பின் என்னை? உலகத்தில் ஒரு காரியத்தைப்பற்றி யொருவர் தன் எண்ணம் சொல் லப் புகுந்தால் முதலில் எண்ணத்தை உள்ளது உள்ளவாறு சொல்லிவிடுவர், பின் அவ்வெண்ணத்தையே உறுதிப்படுத்த அதையே சொல்லின் கூறியது கூறலாம் என்று நினைத்து வேறு பொருளைச் சொல்லி, அப்பொருளின் நுட் பங்கொண்டு முதலிலுள்ள தன் எண்ணத்தையே நிலைநாட்டுவர் அதைப் போலும் என்க.

ஐம்புலன்களும்போல்......உருகும் என்பது வரைக்கும், பாண்டவர்கள் ஐவரை, ஐந்து புலன்களாகவும், துரௌபதியை மனதாகவும், இறைவனை அம்

மனதை நடாத்தும் அறிவாகவும் பொருந்தச் சொன்னர் வில்லிபுத்தூராழ்வார் என்றலும் ஒன்று.

இப்பொருளைக்கொண்டால், ஒரு சாரார் கொள்கைப்படி எழுந்த வினக்களுக்கும், மற்ளுெரு சாரார் கொள்கைப்படி எழுந்த வினக்களுக்கும் இடமில்லாமற் போய்விடும் என்பதில் யாதேனும் ஐயமுண்டோ?

இதிலிருந்து திரௌபதியானவள் தன் காரியங்கள் முற்றுப் பெறுதற்கு, ஐந்து நாயகர்களைத் தவிர்த்து தன்னந் தனியளுய் விளங்கு மொப்பற்ற முதல்வனை நாடி நினைந்து நினைந்து இருந்தாள் எனப் பெறப்படுகிறது.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்ற அருமைத் திருவாக்கை நோக்கின், திரௌபதியின் கற்புத் தன்மையே மாறுபடுமன்றோ வெனின் மாறுபடாது. என்னை? "நினைத்தால் தோஷமில்லை யென்பது துவாபர யுக தருமமாக ஸ்மிருதியிற் கூறப்படலால்" என்று மதுரைத் தமிழ்ச் சங்கத்து பாரத அரும்பதவுரையில் கண்டது. ஆகையால், நாம், "தெய்வந்தொழாஅள்...மழை" என்ற குறளின்படியே கற்புடைய பெண்கள், கணவனையே நினைத்தல் முறை, அதனோடு, இறைவனையும் வேண்டல் செய்தல் 'துவாபர யுக தருமம்' என்று உறுதியாய்ச் சொல்லிவிடலாம்.

## பெண்கள் படித்தால்



மாமிமார்களின் கதி இதுவா?
உங்கள் அபிப்பிராயம் என்ன?

---

"அறிவு"—ஆம், அது நாம் வானுலகு ஏறுதற்குரிய வன் சிறகு.

# விசித்திர விநோதம்

## “இனாம் க்ஷவரம்”



ஒருவன் ஒரு பையனைக் கூடவே அழைத்துக்கொண்டு க்ஷவரக் கடைக்குள் நுழைந்தான். க்ஷவரம் செய்து கொண்டான். பிறகு பையனுக்கும் கிராப்புச் செய்யச் சொன்னான். மயிர் வினைஞன் பையனுக்கு கிராப்புச் செய்துகொண்டிருந்தபோது வந்த மனிதன் இங்கே சுருட்டு உண்டா என்று கேட்டான்.

மயிர் வினைஞன்:—“சுருட்டா? என்னிடம் பீடிதான் இருக்கிறது. சுருட்டு வேணுமானால் அதோ அந்த மூலைக் கடையில் கிடைக்கும்.”

வந்தவன்:—“சரி! நானே போய் வாங்கிக்கொள்ளுகிறேன். நீ கிராப்பை நன்றாகச் செய்துகொண்டிரு.”

என்று சொல்லிவிட்டு வெளியே போனான். மயிர் வினைஞன் கிராப்பைப் பூர்த்தி செய்தான். பதினைந்து நிமிஷங்களாகியும் போன மனிதன் வரவில்லை.

மயிர் வினைஞன்:—(பையனை நோக்கி) “இதென்ன! உன் அப்பா வெளியேபோய் கால்மணி நேரம் ஆகிறது, இன்னும் வரவில்லையே!”

பையன்:—“அவர் என் அப்பா அல்ல.”

மயிர் வினைஞன்:—“பின் யார்?”

பையன்:—“நான் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தேன். அவர் வந்து, ‘அடே பையா! என்னுடன் வா உனக்கு ஷோக்காகக் கிராப்புச் செய்து விடுகிறேன். என்னுடன் வா’ என்றார். சரி என்று வந்தேன். அவர் யார் என்று எனக்குத் தெரியாது.”

---

பழுத்த இலை பச்சை இலையை வெறுக்கின்றது. ஏன்? பச்சை இலை இன்னும் ஒரு நிமிஷநேரம் அதிகமாக மரத்தில் தொங்கு மன்றோ?



"நெஞ்சிற் பதிதல்"

சுப்பையாபிள்ளை:-"நான் எழுதியிருந்தது அவனது நெஞ்சில் நன்ருய்ப் பதிந்ததா?"

மூத்தையா பிள்ளை:—"ஆஹா! சந்தேகம் என்ன? நீ எழுதியது அவனது நெஞ்சில் பதிந்த வேகத்தில் இருதய ஓட்டம் நின்றுபோனதால் அவன் நேற்றே மரணமடைந்துவிட்டான்."

***

வாத்தியார்:—"நீ பரீக்ஷையில் நன்ருய் எழுதவில்லை. பரீக்ஷையில் தேரினுல் உன் அப்பா உனக்கு சைக்கிள் வாங்கித் தருவதாகக் கூறினுலல்லவா? படிக்காமல் நீ என்ன செய்துகொண்டிருக்கிருய்?"

மாணவன்:—"சைக்கிள் சவாரி பழகிக்கொண்டிருக்கிறேன்."

***

வேலைக்காரன்:—"யாரோ ஒருவன் உங்களைப் பார்க்கவேண்டும் என்று வந்துவிட்டுப் போனுன்."

எஜமான்:—"சிறியவனு? பெரியவனு?"

வேலைக்காரன்:—"இரண்டும் சேர்ந்தவன்."

எஜமான்:—"அதெப்படி?"

வேலைக்காரன்:—"மனிதன் ஆறடி உயரம் இருக்கிருன். ஆனுல் ஐந்து ரூபாய் கடனுக்காகவே உங்களிடம் வந்தான். இது சிறுமை அல்லவா?"

***

"மருந்தின் சிறப்பு"

மருந்து விற்பவன்:—இந்த மருந்தை ஒருதரம் வீட்டில் உபயோகிப்பீர்களாயின் மூட்டை, கொசு முதலியவை பஞ்சாய்ப் பறந்துவிடும்"

வாங்குபவர்:—"உண்மையில் இந்த மருந்து நன்ருய் வேலை செய்யுமா?"

மருந்து விற்பவன்:—"அதையெல்லாம் ஏன் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள்? இதை வாங்கிக்கொண்டு போங்கள். திரும்பத் திரும்ப என்னைத் தேடிக்கொண்டு நீங்களே வரப் போகிறீர்கள்."



ப்பன்:—"உன் மகன் பேசப் பழகிக்கொண்டானா?"

குப்பன்:—"பழகிக் கொண்டான்; ஆனால் பேசாமல் இருப்பது எப்படி என்று நான் இப்பொழுது அவனுக்குச் சொல்லிக் கொடுத்துக்கொண்டு வருகிறேன்."

***

மாஜிஸ்ட்ரேட்:—"உன் மோட்டார்கார் போய்க்கொண்டிருந்தபொழுது சப்தம் செய்தாயா?"

ட்ரைவர்:—"செய்தேன் எஜமான்! வாதி ரோட்டைவிட்டு விலகிப் போய்க்கொண் டிருந்தபோது சிறந்து வையவும் செய்தேன்."

***



"காதல்"

நண்பர்:—"என்ன ஓய்! எப்போது பார்த்தாலும் உன் வீட்டுக்காரியின் போட்டோவை விட மாட்டேன் என்கிறாய்! அதே தியானம் போலிருக்கிறதே!"

மற்றவர்:—"போடா பைத்தியமே! எனக்கு என்றேனும் ஒரு நாள் வீட்டுக்குப் போகவேணும் என்ற நினைவு வந்தால் அப்போது என் வீட்டுக்காரியின் போட்டோவைப் பார்ப்பேன். பிறகு வீட்டு நினைவு இந்த ஜன்மத்தில் தோன்றுவதில்லை."

***

ஒருவன்:—எனக்கு நீ பத்து ரூபாய் பாக்கி கொடுக்கவேணும் என்பது ஞாபகம் இல்லையா?"

மற்றவன்:—"இல்லாமல் என்ன? நீ வரும்போதெல்லாம் நான் ஒளிந்து கொண்டிருந்ததை நீ பார்க்கவில்லையா?"

***

நியாயாதிபதி:—"நீ குற்றம் செய்தாயா இல்லையா?"

கைதி:—"இல்லை."

நியாயாதிபதி:—"எப்போதாவது நீ தண்டனை அடைந்திருக்கிறாயா?"

கைதி:—"இதுவரை நான் திருட்டுத் தொழில் செய்தது இல்லை."

---

ஒருமகன் பெற்று அவன் தவறிழைக்கக்காணும் ஒருத்தியைவிட உலகில் அதிக துக்கம் படைத்தவர் யாருமிலர்.

மனைவி:—"இரண்டு வருஷங்களுக்கு முன்பு உலகமெல்லாம் நான்தான் என்றீர்களே! இப்பொழுது அரை நாழிகையேனும் வீட்டில் தங்கமாட்டேன் என்கிறீர்களே ஏன்?"

புருஷன்:—"இப்பொழுது உலக ஞானம் அதிகரித்துவிட்டது."

***

ரேகை சாஸ்திரி:—"உங்கள் கையைப் பார்த்துக் குறி சொல்லுகிறேன். நீங்கள் கலியாணம் செய்யப்போகும் பெண் எங்கே இருக்கிறாள் என்று சொல்லட்டுமா?"

வாலிபன்:—"அந்தச் சங்கதி இப்பொழுது எதற்காக? இப்பொழுதிருக்கும் மனைவி எங்கேபோனாள் என்பதைச் சொல்லுங்கள்."

***



"நோய்"

டாக்டர்:—"சாஸ்திரிகளே! தங்கள் தேகத்தில் எவ்விதமான நோயும் இல்லை. உண்மையில் உள்ளது ஒரே ஒரு நோய்தான்—அது சோம்பேறித்தனம்!"

ஸ்தூலதேகி:—"வாஸ்தவமே—சோம்பேறித்தனந்தான் என்பதை நானும் உணர்ந்திருக்கிறேன். ஆனால் என் வீட்டுக்காரி ஏதேனும் வேலைக்குப் போகும்படி என்னைப் பிடுங்கித் தின்றுகொண்டிருக்கிறாள். சோம்பேறித்தனம் என்பதற்குச் சாதாரணமாக அர்த்தமாகாத ஏதேனும் வைத்திய சம்பந்தமான பேர் இருந்தால் சொல்லுங்கள். இதற்காகவே நான் தங்களிடம் சிரமப்பட்டு வந்திருக்கிறேன்."

***

ஒருவர்:—"உங்கள் புதிய வேலைக்காரன் எப்படியிருக்கிறான்?"

மற்றவர்:—"ரயில் இன்ஜின் மாதிரியிருக்கிறான்."

"அவ்வளவு நன்றாய் வேலை செய்கிறானா?"

"அவ்வளவு நன்றாய்க் கத்துகிறான்."

---

எந்தக்காலமும் எனக்குத் துணையாய் நிற்க இறைவனிடம் ஏற்பதாயிருந்தால் முதலில் வேண்டுவது சமயசாந்தி. இரண்டாவது கல்வியிற் சுவை.

பையன்:—"நல்லவனு யிருந்தால் மோக்ஷம் கிடைக்கும் என்று வாத்தி யார் சொன்னர்."

தந்தை:—' வாஸ்தவம்."

பையன்:—"ஆனல் இதுவரை நல்லவனு யிருந்தால் நாடகத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறேன் என்றுயே, எது வாஸ்தவம்?"

***

ஒருவர்:—"உனக்கு வேண்டிய ஆஸ்தி வந்துவிட்டதே—எனக்குக் கொடுக்கவேண்டிய பாக்கியைக் கொடுத்துவிடு."

மற்றவன்:—"ஆஸ்தி வந்துவிட்ட தென்றுல் எனது வழக்கத்தையும் விட்டுவிடச் சொல்லுகிறுயா?"

***

"எவ்வளவு நஷ்டம்?"

பெரிய மனிதர்:-"என்னங்காணும் ஐயர்வாள்! இந்தக் காபியில் வண்டு விழுந்து கிடப்பதைப் பாரும்."

வேலைக்காரர்:—"சரிதான் ஐயா! அது எவ்வளவு குடித்திருக்கப் போகிறது? வேணுமானல் இன்னும் கொஞ்சம் காப்பி கொண்டுவந்து ஊற்றிவிடுகிறேன்—குடியுங்கள்."



***

ஒருவன்:—"இந்தக் கடிதத்தைப் படி."

மற்றவன்:—"நான் பகலில் படிக்கமாட்டேன். இரவுப் பாடசாலையில படித்து வருகிறேன்."

***

திருடன்:—"எங்கேயாவது போலீஸாரைக் கண்டாயா?"

பெரியவர்:—"இல்லே, ஐயா."

திருடன்:—"ஆனல் உங்கள் கடியாரத்தையும் பணப்பையையும் தயவு செய்து வையுங்கள்."

---

நண்பர் குறைகளை மறந்துவிடு. பகைவர் குணங்களை நாடு, அப்படிச் செய்வதில் உனக்கு நன்மை உண்டு.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்)

(559-ம் பக்கத் தொடர்ச்சி.)

மோட்டார் வீட்டுக்குப்போய் நின்றவுடனே, என்னை ஜகந்நாதன் மருந்து ஷாப்பிலிருந்து அழைத்துக்கொண்டு சென்ற ஸ்திரீயானவள் என் மனைவி மெதுவாகத் தன்பேரில் தாங்கிக்கொண்டு மெத்தைப்படி வழியாக மாடியறைக்குப் போய்விட்டாள். நானும் என் மனைவியின் தந்தையும் வீட்டுக்குள் நுழைந்தோம். இரண்டொரு நிமிஷங்களுக் கெல்லாம் எனது கலியாணத்திற்குச் சாட்சிகளாக வந்த இரண்டு பேரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். கோவிலில் என் மனைவியை யழைத்துக்கொண்டு மோட்டாரிலிருந்து உள்ளே சென்ற மனிதரை மட்டும் காணோம்......இந்த நாலைந்து மனிதர்களுக்கு மாத்திரம் ஒரு சிறிய விருந்து நடந்தப்பட்டது. என்ன ஆச்சரியம்! என்ன அதிசயம்! இப்பேர்ப்பட்ட கலியாணத்தை நீங்கள் பார்த்து மிருக்க முடியாது! கேட்டுமிருக்க முடியாது!

விருந்து முடிந்த சில நிமிஷங்களுக் கெல்லாம் நானும் என் மனைவியின் தந்தையும் தனிமையாக முன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த அறையிலேயே இப்பொழுதும் உட்கார்ந்துகொண்டிருந்தோம். அவ்வறையின் கதவுகளெல்லாம் மூடப்பட்டிருக்கின்றனவா வென்று கவனிப்பதைப்போல் அம்மனிதர் தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்து விட்டுப் பிறகு என்னை நோக்கி "நல்லது; இதுவரையில் சகல காரியங்களும் திருப்திகரமாகவே நடந்திருக்கின்றன. டாக்டரவர்களே! நான் உங்கள் கையில் பணத்தைக் கொடுப்பதற்கு முன் இன்னும் ஒரு நிபந்தனை முடிந்ததாக வேண்டியதாயிருக்கிறது" என்றார். உடனே நான் "அந்த நிபந்தனை யென்ன" வென்று தாங்கமுடியாமல் கேட்டேன்.

மறுமுறை அம்மனிதர் தன்னைச் சுற்றிப் பார்த்து மெதுவான குரலில் "உங்கள் மனைவி பொழுது விடியுமுன் மரண மடைதல் வேண்டும்! இது நிச்சயம்—தெரிகிறதா? இப்பொழுது மணி பன்னிரண்டடித்து இருபது நிமிஷங்களாகி விட்டன!" என்றார்.

"என்ன? என்ன? பணத்தைக்காட்டி உங்கள் மகளையே கொலை செய்யும் படியா சொல்லுகிறீர்கள்?" என்று நான் மிக்க கோபத்துடனும் ஒருவித ஆவேசத்துடனும் எழுந்து கத்தினேன்.

இதற்கு அம்மனிதர் என்னைப் பார்த்து நிதானமாக "நான் கொடுக்கிறேனென்று சொல்லும் பணம் உம்மைச் சேருவதற்கு முன் அவள் இறக்கவேண்டியது நிச்சயம்!—இவ்வளவுதான்!" என்றார்.

அம்மனிதர்:—உமது மனைவி பொழுது விடியுமுன் இறத்தல்வேண்டு மென்றுதான் சொன்னேன். இன்னும் சில நாழிகளுக்குத் தான் அவள் உயிருடனிருக்க முடியும். இதில் கொஞ்சமும் சந்தேகம் கிடையாது. அவளுடைய வேதனையைக் குறைத்துவிட உங்களால் முடியுமே என்று சொன்னேன்—என்றார்.

நான்:—(தாங்கமுடியாத சீற்றத்துடன் அவரை நோக்கி) அப்படியானால் நான் அவளைக் கொலை செய்யவேண்டுமென்பதுதான் உமது அபிப்பிராயமோ? நீர் கலியாணத்தை யுத்தேசித்து இருபதினாயிரம் ரூபாய் கொடுக்க முன்வரவில்லை. மகா பாதகமாகிய கொலையைச் செய்வதற்கே பணம் தருகிறீர் போலும்!—என்றேன்.

அம்மனிதர்:—அடடா! நீர் பிசகாக எண்ணிக் கொண்டுவிட்டீர்! கொலை செய்வதிலும் பலவிதங்களிருக்கின்றன! இப்பொழுது உமது மனைவியை நீர் கொலை செய்வதனால் அவளுடைய வேதனை யொழிந்துவிடுகிறது. அவளிறத்தல் ஒரு தலையான காரியம். ஆகவே வேதனைப்பட்டுக் கொண்டு அவள் உயிருடனிருப்பானேன்! அவள் வேதனையுடன் வருந்துவதை நாம் இன்னுங் கொஞ்ச நேரத்திற்காயினும் கண்ணால் பார்த்துக்கொண்டிருப்பது பாவமே யல்லாது அவளுடைய உயிரை முன்னமேயே போக்கிவிடுவது ஒருநாளும் பாவமாகாது! புண்ணியமாகும்!!—என்றார்.

எனக்கு அடக்கமுடியாத கோபம் பிறந்தது. பேயே மனித ஸ்வரூபமாக வந்திருக்கிறதென்று நான் முன் சந்தேகப்பட்டது ஒருவேளை உண்மையாகவே யிருக்கலாமோவென்று தற்சமயம் அச்சந்தேகம் என்னிடம் அதிகரித்தது.

உடனே நான் அவரைப் பார்த்து மிக்க வெறுப்புடன் "ஒரு உயிர் கஷ்டப்பட்டாலும் சுகப்பட்டாலும் சரி, அதைப் போக்கடிப்பது யாவராலும் மன்னிக்கக்கூடாத மகாப் பாதகமாகும். மேலும் ஐயா! கொலை செய்வதற்காக நீர் எனக்குப் பணம் கொடுப்பதாகச் சொல்லுகிறீர்கள். இவ்விஷயத்தை நான் போலீஸுக்குத் தெரிவித்தால் உம்முடைய கதியென்னவாகும் தெரியுமா?" என்றேன்.

இதைக் கேட்டு நகைத்த வண்ணம் அவர் "ஓஹோ! எங்கெங்கோ போகிறீர்களே! டாக்டரவர்களே! நமக்குள் ஏன் மனஸ்தாபம்? மேலும் இவ்விதம் வீண் பேச்சைப் பேசிக்கொண்டு நாம் காலத்தைப் போக்குவதைவிடக் காரியம் ஆகும் வழியைப் பார்க்கலாமே? இன்னொரு விஷயம் தங்களுக்குத் தெரியவேண்டும். நான் எந்தக் காரியம் செய்தாலும் அதனால் பிற்காலத்தில் எனக்கு ஒரு கெடுதியும் வராதென்பதை நீங்கள் நிச்சயமாய் நம்பலாம். நான் செய்யும் காரியங்களைக் கண்ணால் பார்க்கும் சாக்ஷிகள் கிடையாது. என் காரியங்களனைத்தும் உமக்குமட்டுந்தான் தெரியும். நீர் கோர்ட்டுக்குப்போனால் உம்மை முதலில் யார் நம்புவார்கள்?" என்றார்.

இவர் கூறுவது உண்மையே! இவ்விஷயத்திற்கு சாக்ஷிகளோ கிடையாது. என்னை யார்தான் நம்புவார்கள்?.........இந்தக் கிழவனை யேமாற்றுவது பெருங் கஷ்டமென்றும், இவன் |சொல்லுவதைச் செய்யாமல் தந்திரமாய்த் தப்பி ஓடிப்போய்விடவேண்டுமென்றும் எண்ணிக் கொண்டேன். ஆனால் என் மனைவி! இம்மனிதனின் கொடூர எண்ணத்தினின்றும் காப்பாற்றிவிட வேண்டுமென்றோ? நான் மாத்திரம் தப்பியோடிவிட்டால் வேறு

ஒரு டாக்டரைவிட்டு அவளைக் கொலை செய்யச் சொல்ல, அந்த டாக்டரும் பணத்திற் காசைப்பட்டு அந்த அறியாப் பாலகியைக் கொலை செய்துவிட்டா லென்செய்வது? இதுவே எனக்குப் பெருத்த விசாரமாயிருந்தது. நடந்து போன விஷயங்களும் நடந்துகொண்டிருக்கும் விஷயங்களும் கனவிலோ அல்லது நினைவிலோ என்ற சந்தேகம் என்னைவிட்டு நீங்கவேயில்லை! இவ் விஷயங்களை நினைக்க நினைக்க என் தேகம் உச்சி முதல் உள்ளங்கால் வரை யில் நடுங்கிற்று. எனக்கு ஒருவிதமான யோசனையும் தோன்றவில்லை. இரண் டொரு நிமிஷம் மயங்கி மௌனமாயிருந்தேன்.

பிறகு அம்மனிதரைப் பார்த்து "உங்கள் பெண்ணை யெனக்குக் கலியா ணம் செய்து கொடுத்ததிலும், இப்பொழுது அவளையே நான் கொலைசெய்து விடவேண்டுமென்று நீங்கள் எண்ணுவதிலும் மிகக் கொடூரமான காரணம் ஒன்று இருந்தே தீரவேண்டும்" என்று சொல்லிவிட்டு அவர் என்ன பதில் சொல்லப்போகிறாரென்று கவனித்தேன்.

அம்மனிதர்:—இந்த விஷயங்களைப் பற்றியும் இவைகளின் காரணத் தைப் பற்றியும் நீங்கள் அதிகமாகச் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லையே?

நான்:—ஏன்? இவ்விஷயங்களில் என்னுடைய உதவி யுங்களுக்குத் தேவையாயிருக்கிறபடியால் எனக்கு எந்தக் கேள்வி கேட்பதற்கும் பாத்திய முண்டு. நல்லது; நான் இவ்விஷயங்களில் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டியதவசியமில்லை யென்றல்லவா சொன்னீர்கள்? நானும் கண்டிப்பாய் சொல்லிவிடுகிறேன்: நீங்கள் என்ன பணம் கொடுத்தாலும் மகாப் பாதகமா கிய கொலை யென்னும் இக்கொடிய செயலை நான் ஒருநாளும் செய்யமாட் டேன்!—என்று திடமாயும் அழுத்தந் திருத்தமாயுங் கூறினேன்.

இதைக் கேட்டதும் அம்மனிதர் என்னை விரைத்துப் பார்த்து "அப்படி யானால் நான் சொல்லுகிறபடி நீங்கள் கேட்கமாட்டீர்களோ?" என்று கத்தி னார். மிஞ்சினால் கெஞ்சுவதும் கெஞ்சினால் மிஞ்சுவதும் மானிட இயல்பு ஆனது பற்றி, நான் அவர் கத்தினதற்குப் பயந்துபோவதாகக் காண்பித்துக் கொள்ளக் கூடாதென்ற எண்ணமுடையவனாய் "ஏன்? நீங்கள் சொல்லுகிற படி நான் ஏன் கேட்கவேண்டும்? என் மனம்போலவேதான் செய்வேன். மேலும் மாடி யறைக்குப்போய் உமது புத்திரியைப் பார்த்துவிட்டு, முடியு மானால் அவளைக் காப்பாற்றுவதற்கும் வழி தேடப்போகிறேன்!" என்று சொல்ல அம்மனிதர் சிரித்துக் கொண்டே "ஆகா! அவளைக் காப்பாற்றவா இது உங்களால் முடியாத காரியம்!" என்றார்.

நான்:—மருந்து கொடுத்துக் காப்பாற்ற முடியாதபோனாலும் இப் பொழுது அவள் கொலை செயயப்படுவதினின்றும் காப்பாற்றலாமல்லவா?

அம்மனிதர்:—அப்படியானால் நான் செய்வதற்கு எதிர்த்து நீங்கள் செய் யப்போகிறீர்களோ?

நான்:—உம்முடைய புத்திரியை நீர் கொலை செய்வதினின்றும் நான் தடுக்கப்போகிறேன். மேலும், இனியவளது அறைக்கு நீங்கள் போகவுங் கூடாது! நான் டாக்டர்; அவளுக்கு சிகிச்சை செய்யவேண்டு மென்பதாக நான் அழைக்கப்பட்டிருக்கிறேன். ஆகையினால் நீங்கள் உமது புத்திரியின் அறைக்குள் என் அனுமதியின்றிச் செல்வீராகில் நான் உடனே இச்சங்கதி

யைப் போலீஸுக்குத் தெரிவித்துவிடுவேன் !—என்று கூறிவிட்டு, அவர் நான் சொல்லுவதைக் கேட்டு அஞ்சுகிருரா அல்லது ஏளனமாகவே யிருக்கிருரா வென்று கவனித்தேன்.

அம்மனிதருக்கு என்ன தைரியமோ, அல்லது அவர் யார்தானே நானறியேன்! நான் பேசின வார்த்தைகளை ஒரு பொருட்டாகவே அவர் மதிக்காமல் புன்னகைபுரிந்த வண்ணம் "ஓஹோ! போலீஸ் புலிகளைக் கூப்பிடப்போகிறீர்களோ? கூப்பிடுங்கள் !.........மேலும் என்னுடைய புத்திரி படுத்த படுக்கையா யிருக்கும்போது அவளருகில் நான் போகக்கூடா தென்று தடுப்பதற்கு நீர் யார்?" என்ருர். நானும் அஞ்சாமலே அவருடன் பேச ஆரம்பித்தேன்.

நான்:—நீர் அவளது அறைக்குள் நுழையக்கூடாது! நுழையாமல் பார்த்துக்கொள்ளவேண்டியது என்னுடைய கடமையேயாகும்.....பொழுது விடிந்துபோவதற்குள் ஏதோ சில ரகசியக் காரணங்களினுலே உமது புத்திரி இறத்தல் வேண்டும் என்னும் உமது கொடிய எண்ணத்தை யெனக்குத் தெரிவித்துவிட்டீர். என்னுடைய உதவியில்லாமல் நீரே அவளைக் கொலை செய்துவிட்டிருப்பீர்! ஆனுல் டாக்டர்கள் பரிசோதனை செய்து பார்த்து அவள் கொலை செய்யப்பட்டிருக்கிறதாகத் தெரிவித்துவிட்டால் உமக்கு அதிகத் துன்பம் நேரிடும். இதற்காகவே டாக்டர் வேலையிலிருக்கும் என்னையே கொலை செய்யச் சொல்லுகிறீர்! நான் கொலை செய்துவிட்டு, இயற்கையாகவே இறந்திருக்கிருளென்பதாக மரண ரசீது கொடுத்துவிட வேண்டுமென்பதுதானே உமது கருத்து?—என்றேன்.

அம்மனிதர்:—ஆம். இதற்காகவேதான் நான் உமக்கு இருபதினுயிரம் ரூபாய் கொடுக்கிறேனென்பது!

நான்:—நான் மரண ட்ர்டிபிகேட் கொடுக்கவேண்டுமோ?

அம்மனிதர்:—ஆம்!

நான்:—ஐயா! உம்மைப்போல் கொடூர ஹிருதயமுள்ள மனிதரை இதுவரையில் நான் பார்த்ததே கிடையாது.

அம்மனிதர்:—பேஷ்! நீங்கள் கூறுவதற்காக மிகவும் மெச்சுகிறேன். ஆனுல் நீர் மாத்திரம் ரொம்பவும் நல்ல மனுஷியர்தானே? பணத்தை முன்னிட்டு முன்பின் பார்த்தறியாத பெண்ணை நீர் கலியாணம் செய்துகொள்ளவில்லையா?

நான்:—(கோபத்துடன்) என்ன? நீர் பேசுவது உமக்குத்தான் ஒழுங்காகவிருக்கிறது! பணத்தை யென்முன் காட்டி என் மனதை யுமது பக்கமாகச் சரிப்படுத்திக்கொண்டு விட்டீர்! ஆ! கடவுளே! நல்ல வேளையாக இம்மனிதர் கொலை செய்யும்படி யென்னிடம் சொன்னுர். ஐயா! இந்தக் கொடிய செயலைப் புரியும்படி நீர் சொன்னதிலிருந்துதான் உமது குணம் இப்பேர்ப்பட்டதென்று அறிந்துகொண்டேன். இவ்விஷயத்தைப் பற்றி நீர் பேசியிராவிடில், பணத்தை முன்னிட்டும், உம்மை மிக்க நல்லவரென்று நம்பிக்கொண்டும், இன்னும் நீர் என்னென்ன செய்யச் சொன்னுலும் செய்திருப்பேன்!......இனி யுமக்கும் எனக்கும் சம்பந்தமில்லை! தகாத வார்த்தைகளை யென்னிடம் பேசுவதை நிறுத்திக் கொள்ளுங்கள்—என்றேன்.

(தொடரும்.)

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்

பிரஜோற்பத்தி௵ பங்குனி௴—கலியுகாதி 5033, சாலிவாகனம் 1854
பசலி 1341, கொல்லமாண்டு 1107, ஹிஜுரி 1350,
இங்கிலீஷ் 1932௵ மார்ச்சு௴—ஏப்ரல்௴

| பங்குனி௴ | மார்ச்சு௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | ஞா | சஷ்53-33 | கி❋41-38 | சித்60 | கிருத்திகை |
| 2 | 14 | திங் | சப்57-58 | ரோ47-38 | அமி60 | யாத்திரை செய்ய |
| 3 | 15 | செவ் | அஷ்60 | மிரு52-3 | சி52-3மர | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 16 | புத | அஷ்0-45 | திரு54-45 | சித்60 | கதிரறுக்க, தானியம் வை |
| 5 | 17 | வியா | நவ1-15 | புன55-18 | அமி60 | சுப முகூர்த்தம் செய்ய |
| 6 | 18 | வெ | தச0-25<br>ஏகா57-23 | பூச54-8 | மர60 | ஸமார்த்த ஏகாதசி, அவமாகம் |
| 7 | 19 | சனி | து52-20 | ஆயி50-53 | மர50-53அ | கரிநாள், வைஷ்ணவ ஏகா |
| 8 | 20 | ஞா | திர45-50 | மக46-15 | ம46-15சித் | மேஷாயனம் நா-48-3. |
| 9 | 21 | திங் | சது38-5 | பூர40-30 | சித்60 | சித்திரம் எழுத, |
| 10 | 22 | செவ் | ○29-38 | உத்33-50 | அ33-50சி | பௌர்ணமி, பங்குனி உத் |
| 11 | 23 | புத | பிர20-43 | அஸ்26-53 | மர26-53சி | வசந்தோத்சவம் |
| 12 | 24 | வியா | துதி11-43 | சித்19-53 | சி19-53அ | வியாதியஸ்தர் குளிக்க |
| 13 | 25 | வெ | திரி3-0<br>சது55-0 | சுவா13-18 | சித்60 | |
| 14 | 26 | சனி | பஞ்48-23 | விசா7-33 | சித்60 | |
| 15 | 27 | ஞா | சஷ்42-55 | அனு2-53<br>கே59-35 | மர60 | |
| 16 | 28 | திங் | சப்39-3 | மூல57-58 | சி57-58மர | |
| 17 | 29 | செவ் | அஷ்36-55 | பூரா58-10 | சி58-10அ | |
| 18 | 30 | புத | நவ36-30 | உத்60- | அமி60 | |
| 19 | 31 | வியா | தச37-50 | உத்0-5 | சித்60 | |
| 20 | 1932௵ ஏப்ரல்௴ 1 | வெ | ஏகா40-38 | திரு3-33 | மர3-33சி | |
| 21 | 2 | சனி | து44-45 | அவி8-23 | சி8-23அ | |
| 22 | 3 | ஞா | திர49-48 | சத14-20 | சித்60 | பிரதோஷம் |
| 23 | 4 | திங் | சது55-33 | பூரட்21-3 | ம21-3சி | மகாசிவராத்திரி |
| 24 | 5 | செ | ●அ60- | உத்28-23 | அ28-23சி | சர்வத்திர அமாவாசை |
| 25 | 6 | புதன் | அமா1-53 | ரே36-0 | மர60 | சித்திக்கணபதி விரதம் |
| 26 | 7 | வியா | பிர8-25 | அஸ்43-48 | அ43-48சி | யுகாதி பண்டிகை |
| 27 | 8 | வெ | துதி14-53 | பர51-25 | சித்60 | மூலிகை உபயோகிக்க |
| 28 | 9 | சனி | திரி21-0 | கி❋58-35 | அமி60 | கிருத்திகை |
| 29 | 10 | ஞா | சது26-33 | ரோ60 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 30 | 11 | திங் | பஞ்31-10 | ரோ5-0 | அமி60 | சர்வ முகூர்த்தம் செய்ய |
| 31 | 12 | செவ் | சஷ்34-30 | மிரு10-15 | சி10-15மர | மேஷாரவி நா-52-33, சஷ்டி |
| 1 | 13 | புத | சப்36-25 | திரு14-10 | சித்60 | வருஷப்பிறப்பு |

| | | | |
|---|---|---|---|
| கு-பு<br>ராகு | சுக் | | |
| செவ் | 11-மீன-செ<br>12-மே-புத<br>16-ரிஷ-சுக்<br>24மீ-வக்-பு | | குரு |
| சனி | | | |
| | | | கே |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.